


# கோத்ரெஜ் அளிக்கும் புதிய எவிக்ஸ் ப்ளூ டிடர்ஜெண்ட் வில்லை




பளிச்சிடும் வெண்மையைத் தருகிறது

எவிக்ஸ் சக்திவாய்ந்த வெண்பொருள் ஒன்றைக் கொண்டுள்ளதால் உங்கள் துணிகள் முன்பைவிட அதிக வெண்மையையும் அதிக பளபளப்பையும் பெறுகின்றன. நீலம் போன்ற சாதனத்தை இனி நீங்கள் உபயோகிக்க வேண்டியதே இல்லை.

எவிக்ஸ் விசேஷமான முறையில் கலவை செய்யப்பட்டது எவிக்ஸ் காரக்கசிவற்றது. கூழ்போல் ஆவதில்லை. பசையற்றது. எவிக்ஸ் ஒரே துண்டாக நிலைத்திருப்பதால் அதை இறுதிவரை உபயோகிக்க முடியும். நீங்கள் அதிகமான துணிகளைத் துவைக்கலாம். கூடுதலான சேமிப்பைப் பெறலாம்.

காரக்கசிவற்ற
**எவிக்ஸ்**
ப்ளூ டிடர்ஜெண்ட் வில்லை
நீடித்து உழைக்கிறது

CHAITRA-G 97-TAM



# THE PRECOCIOUS BABY JOY TOY!

Mr K V Srinivasan
Chairman
JOY TOY Industries

A happy environment is as essential as a nutritious diet for the balanced growth of the child. Toys and dolls play a significant role in creating for the child an atmosphere of congeniality. But, the average Indian can hardly afford the luxury of providing the child with the requisite type of dolls.

It is this problem that agitated the mind of Mr.K.V.Srinivasan -- popularly known as "Joy Toy Mama". As one of those few extensively travelled Indians, he put to purpose the rich knowledge he had acquired during his travels abroad. Wherever he went, he studied the children of that land, the types of dolls they played with, and the various types of playthings available to children there. The rich experience he thus gathered formed the JOY TOY concept.

"The Toy Revolution", as Srinivasan puts it, is intended to make toys reach the nook and corner of our vast land. The price of the dolls should be such that the economically weaker sections should afford them. "Dolls and Toys are more than playthings. They are, verily, the instruments of knowledge and education; carriers of smiles and laughter; gaiety and goodwill".

The JOY TOY product range is vast ad and unique. Innovation is the underlying theme of each JOY TOY piece. The most attractive in the range are the electronically motivated, cute talking dolls. Some of them are fitted with very sophisticated, at times imported, components. Nevertheless, they are economically priced for the poor Indian consumer. Others in the JOY TOY range are; Meccano Sets, ingeniously devised word-building sets, jigsaws, puzzles and the like that sharpen the intellect of the nascent mind; piggy boxes of many attractive designs for children to put away their small savings and thus inculcating the habit of thrift and saving; an infinite variety of gift novelty articles like the JOY LIGHT-N-HOOT siren-fitted torchlight (familiar to "Kalki" readers), battery-operated gadgets of every description, desk and permanent calendars, pen sets, electronic metal detectors, electronic music makers, etc.

The list is long, long, indeed!

To cater to the expanding demand JOY TOY Industries is presently setting up an ultra-modern Rs.1 Million project at Tirupathi with the financial assistance of the Andhra Pradesh Government. This new plant is expected to go into production before the end of this year - the INTERNATIONAL YEAR OF THE CHILD. What could be a more fitting tribute to the children of today, citizens of tomorrow?

JOY TOY has been exporting its products even to some of the European countries amidst stiff competition from stalwarts like Japan, Italy, etc. But export of toys is a tedious task, according to Srinivasan who is also the Vice-President, Southern Region, of the All-India Toy Mfrs. Association.

This is because of the absence of a separate Export Promotion Council to attend to the needs of the Doll Exporters. Presently, exporters have to go through two separate Councils resulting in unnecessary duplication of work. Certain adjustments are also necessary in the Excise Duty levies. The AITMA has already brought these anomalies to the attention of the Government and hopes remedial measures will soon be taken. Srinivasan has also been fighting for the removal of Sales Tax on children's playthings. On his representation, the Gujerat State Government has already lifted Sales Tax on this commodity. Other states should follow suit - Tamilnadu, especially.

In view of the expertise and design facilities available with the JOY TOY organisation, this firm is prepared to collaborate with other firms in the design and production of sales aids. To cite one instance, for a children's tonic capsule manufactured by a leading multinational firm, JOY TOY designed and supplied an attractive, toy-shaped container which boosted the sales of this pharmaceutical firm. JOY TOY'S children's small savings piggy boxes have been bought by many leading banks as 'give-aways' to juvenile account holders.

JOY TOY is 3 years now. It was set up in 1973 as a subsidiary unit of a larger industrial group. Later, it was converted as a partnership. The new company took over from the partnership two years ago.

"The nascent organisation is happily strutting ahead to the threshold of progress. On this happy occasion, the promoters of the Company thank its numerous friends, patrons and well-wishers. The JOY TOY baby prostrates before all of you for your continued support and blessings."

K.V.Srinivasan

# ஜாய் டாய் கோடை விடுமுறை பரிசு திட்டம்

## ஜாய் ஜாலி டால்ஸ் செட்

சுவாரசியமான எழுத்து கோர்க்கும் விளையாட்டு. மன மகிழ்ச்சியுடன், மூளைக்கு வேலையும் கூட. இதுவரை நீங்கள் கண்டிராத நவீனம். குழந்தைகளுடைய புத்திகூர்மையை பிரதிபலிக்கச் செய்கிறது. கழட்டி மாட்டக்கூடிய 12 பொம்மைகள் இதில் உள்ளன. பொம்மைகளுக்கு வேண்டிய காலணிகளும், எழுத்துகள் பொறித்த 48 சட்டைகளும் உள்ளன. பொம்மைகளைப் பூட்டி உருவம் கொடுத்து, சட்டைகளை மாட்டுவது குஷி, படுகுஷி! சட்டையின் மேலேயே எழுத்துகள் பொறிக்கப்பட்டிருப்பதால், பங்குபெறும் சிறுவர்களிடையே சுவாரசியமான எழுத்துக் கட்டிடப் போட்டி உருவாகிறது. இதில் ஒரு சிறிய ஆங்கில அகராதியும் உள்ளது. சிறுவர்களை இந்த விளையாட்டு முழுவதும் கவர்ந்து விடும். ஜுலையில். வழக்கமான விலை : ரூ 42.00




## ஜாய் சுமாட்சு "அமெரிக்க" ராணுவ டாங்க் கிட்

அச்சு வேறு ஆணி வேறாகக் கழட்டி, மறுபடி பூட்டலாம். சிறுவர்களுக்கு உற்சாகமளிக்கும் அதிசயம் இது. வண்ணமிக்க அட்டைப்பெட்டியில் வருகிறது.

வழக்கமான விலை : ரூ 18.95



## ஜாய் பென்-அன் ஸெட்

டார்ச் ஸெட்டுடன் கூடிய கச்சிதமான கவர்ச்சிமிக்க பால் பாயின்ட் பேனா. ஒரு 'பென்ஸெட்' பாட்டரியில் இயங்குகிறது. நவீனமானது, நாசூக்கானது. வழக்கமான விலை : ரூ 11.25 (பாட்டரி உள்பட)



இவைகளைத்தவிர உங்களை வியப்பில் ஆழ்த்தும் மற்றொரு ஜாய் டாய் பரிசு. தோள் பட்டையில் மாட்டிக்கொள்ளக்கூடிய அழகிய பள்ளிக்கூடப்பையில் இவை நான்கும் வைக்கப்பட்டு, திட்டத்தட்ட பாதி விலையில் எமது கோடை விடுமுறை பரிசாக குழந்தைகளுக்கு அளிக்கப்படுகிறது. ரூ 58.00 மட்டுமே! தபால் செலவு உள்பட (ஸ்டாக்குகள் உள்ள வரைக்கும்).

## ஜாய் டாய் குழந்தைகள் கிளப்

இன்றே சேருங்கள். ஆண்டு சந்தா ரூ. 12. இலவச வைத்திய பரிசோதனை; ஹிந்தி வகுப்பு; முக்கியமாக, ஜாய் டாயிலிருந்து நீங்கள் வாங்கும் எல்லாப் பொருள்களுக்கும் 10 சதவிகித தள்ளுபடி (இந்த "கோடை பரிசு திட்டம் உட்பட!). இன்றே விபரங்களுக்கு எழுதவும். 16 வயதுக்குள்ளான குழந்தைகள் சேரலாம்.

30.6.79 வரை மட்டுமே இந்த திட்டம். அதன் பிறகு வரும் விண்ணப்பங்கள் ஏற்றுக் கொள்ள இயலாது. ஆகவே காலதாமதம் வேண்டாம். இன்றே மணியார்டர் செய்யவும். அல்லது நேரில் விண்ணப்பிக்கவும்.

## அதிர்ஷ்ட பரிசு

ஜாய்டாயிலிருந்து இதை வாங்கும்போது, இதன் கிரய ரசீதை பத்திரமாக வைத்துக் கொள்ளுங்கள். ரசீது நம்பர்களைக் குலுக்கிப் போட்டு, ஜூலை மாதத்தில் மூன்று அதிர்ஷ்டப் பரிசுகள் வழங்கப்படும் :-

முதல் பரிசு :
ரூ 250 பணமாகவோ அல்லது அந்த மதிப்புக்கு பள்ளிப்பாடப் புத்தகம்/நோட் புத்தகம்/யூனிபாரம்/பள்ளிச் சம்பளம்.

இரண்டாவது பரிசு : ரூ. 150 பணமாகவோ அல்லது மேற்கூறியவாறே.

மூன்றாவது பரிசு : ரூ. 100 பணமாகவோ அல்லது மேற்கூறியவாறே.



1979 சர்வதேச குழந்தைகள் ஆண்டு

ஜாய் டாய் JOY TOY
இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்
தபால் பெட்டி 1057
81 எல்டாம்ஸ் ரோடு, மதராஸ்-18



# 6X6

எழுத்தாளர் லக்ஷ்மி தம்மால் மறக்க முடியாத ஆறு தேதிகளைப் பற்றிக் கூறுகிறார்:

**1940 ஜனவரி 7ம் தேதி**

எனக்கு அமரர் கல்கி கைப்பட எழுதிய கடிதம் கிடைத்தது: ''உங்கள் கதை விகடனில் பிரசுரிக்க ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்''. முதல் கதை ஆதலால் சந்தோஷத்தால் துள்ளினேன். அப்போது நான் ஸ்டான்லி மருத்துவக் கல்லூரியில் முதல் வருட மாணவி. எனது ஹாஸ்டல் தோழிகளிடம் பெருமையாகச் சொல்லிக் கொண்டேன். ''தகுந்த தண்டனை'' என்பது கதையின் தலைப்பு.

**1955 டிசம்பர் 10ம் தேதி**

சமீபத்தில் வெளிநாட்டுச் சிநேகிதருடன் திருக்கழுக்குன்றம் சென்றபோது கோயில் பிராகாரத்தில் பதித்துள்ள திருவாசகத்தைப் பார்த்ததும் பழைய சம்பவம் ஞாபகத்துக்கு வந்தது. திசை திரும்பிய தவறான காதலாலும், கொலையில் சம்பந்தப்பட்டதாலும் ஓர் இந்திய இளைஞனுக்கு ஆப்பிரிக்காவில் தூக்குத் தண்டனை விதித்துத் தீர்ப்பளித்தார்கள். நான் அங்கு சென்றபோது, ஓர் இந்தியப் பிரஜை என்பதால் என்னைப் பார்க்க அவன் ஆர்வம் காட்டினான். எனது மனத்தில் குடிகொண்ட சோகம் காரணமாய் அவனைச் சந்திக்க மறுத்துவிட்டேன். அவனது பெரியம்மா கேட்டுக் கொண்டதால் ''பிணக்கிலா'' திருவாசகப் பதிகத்தை எழுதிக் கொடுத்தேன். தூக்கு மேடை ஏறுவதற்கு முன் அவன் இதைத்தான் கடைசியாகப் படித்தானாம். நினைத்தாலே நெஞ்சை அடைக்கிறது.

**1930 மார்ச் 12ந் தேதி**



திருச்சிக்கு அருகில் உள்ள கிராமத்தில் காளி கோயில் திருவிழா. எனக்குச் சாதாரணமாகவே பெரிய ஓசை, அதிர் வேட்டு என்றால் ரொம்ப அலர்ஜி. அன்று விழா ஆரம்பத்தின் அறிகுறியாக 27 அதிர் வேட்டுக்கள் போட்டார்கள். அதைத் தாங்க முடியாமல் நான் அன்று இரவு முழுவதும் அலற, அதைப் பார்த்து வேறு சிலரும் அலற, பலருக்கு என்னமோ ஏதோ என்று விசித்திர சந்தேகங்கள் என்னைப்பற்றித் தோன்ற ஆரம்பித்து விட்டது. மருத்துவர் கூட வந்து விட்டார்! இன்றும் அதிர் வேட்டு என்றாலே உடம்பு நடுங்குகிறது.

**1977 அக்டோபர் 8ந் தேதி**

எனது அம்மா இறந்த தினம். இறக்குமுன் (வெள்ளிக் கிழமை மாலை) என்னை வரச் சொல்லி நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தார். வைத்தியர் என்ற முறையில் அவரைப் பார்த்து விட்டு ஆறுதல் சொன்னேன். ''நாளை எல்லாம் சரியாகி விடும். இப்போது தூங்கு'' என்று நான் சொல்ல, ''எனக்கு நாளை என்று ஒன்று இருக்காது'' என்றார். நான் அதை நம்பவில்லை. அடுத்த நாள் என்னை விடச் சிறந்த டாக்டர் என்பதை அவர் நிரூபித்து விட்டார். அவர் இல்லை, அவர் சொன்ன சொல்தான் இருந்தது.



**1947 ஜனவரி 12ம் தேதி**

நடுஇரவு. சென்னையில், எங்கள் எதிர் வீட்டில் உள்ளவர், என்னை அவர் மனைவிக்குப் பிரசவம் பார்க்க அழைத்தார். அப்போது நான் ஹவுஸ் சர்ஜன், பயிற்சிதான் பெற்று வந்தாலும் மனத்தில் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு கிளம்பினேன். என் முதல் கேஸ் ஆபரேஷன் வெற்றி. குழந்தையைக் கையில் எடுத்தவுடன், அதன் அழுகுரல் எனக்கு இனம் புரியாத சந்தோஷத்தைக் கொடுத்தது.

**1969 பிப்ரவரி 4ம் தேதி**

விமானம் பம்பாய் நகரத்தைச் சுற்றிச் சுற்றிவந்து கொண்டிருந்தது. பைலட் ''இன்னும் சில நிமிடங்களில் பம்பாயில் இறங்குவோம் பம்பாயின் அழகை ரசியுங்கள்'' என்று அறிவித்தார். ஆனால் பம்பாயை 45 நிமிடம் விமானம் சுற்றவே எல்லோருக்கும் சந்தேகம் எழுந்தது. விமானத்தில் ஏதோ கோளாறு என்று புரிந்து போயிற்று. பிறகு பம்பாய் அழகை யார் ரசிப்பார்கள்? அசடு வழியப்பலர் சிரித்தாலும் உள்ளுக்குள் எல்லோருக்கும் கலக்கம்தான். கந்த சஷ்டி கவசம் படிக்க ஆரம்பித்தேன். திடீரென்று விமானம் தரை தட்டும் ''கடக் கடக்'' சப்தம். எல்லோர் முகத்திலும் சிரிப்பு, ஒருவரையொருவர் கைகுலுக்கிக் கொண்டார்கள். வெளியே டாக்டர்களும், ஆம்புலன்ஸ் வேன்களும் சூழ்ந்திருப்பதைப் பார்த்ததும் எவ்வளவு பெரிய ஆபத்திலிருந்து தப்பினோம் என்பது புரிந்தது.



பேட்டி: ''சிக்கி.''

# பா.ரா. உஷார்!



செம்பியன்

அமைச்சர் பா.ரா. தமது காரியாலய அறைக்குள் நுழைந்ததுமே, ''நான் சொன்னது போல் அறிக்கை அனுப்பியாகி விட்டதா?'' என்று கேட்கிறார்.

'' 'ஓ மின் உற்பத்தி நிலை திருப்திகரமாக இருக்கிறது' என்று தங்கள் அறிக்கையை மாநில அரசுகள், பத்திரிகைகள், மத்திய அரசின் பல்வேறு மந்திராலயங்கள் எல்லாவற்றுக்கும் அனுப்பி விட்டேன்'' என்கிறார் காரியதரிசி.

''பேஷ்! பேஷ்!'' என்று மகிழ்ச்சியுடன் மேஜை எதிரே அமைச்சர் அமர்ந்தாரோ இல்லையோ, டெலிஃபோன் மணி ஒலிக்கிறது!

''ஹலோ, நான் மேற்கு வங்க முதல்வர் பேசுகிறேன். இங்கு இரண்டு மின் நிலையங்கள் ஒரே சமயத்தில் பழுதடைந்து விட்டன. இரவில் மின்மினிப் பூச்சி வெளிச்சம் தவிர வேறு ஒளியே கிடையாது. நீர் என்னடாவென்றால் மின் உற்பத்தி நிலை திருப்திகரம் என்று அறிக்கை விட்டிருக்கிறீரே?''

''அதனாலென்ன?'' என்கிறார் பா.ரா. ''இதிலிருந்து மின் நிலையங்கள் சரிவர பராமரிக்கப்படவில்லை என்று தெரிய வருகிறதே யொழிய, மின் உற்பத்தி நிலை திருப்திகரமாக இல்லை என்று அர்த்தமாகாதே! நிலையங்கள் பழுதடையாமல் இருந்தால் விளக்குகள் எரியுமா இல்லையா?'' என்று கேட்கிறார்.

வெலவெலத்துப்போய், ''அது சரி'' என்று மேற்கு வங்க முதல்வர் ஃபோனை வைக்கிறார்.

மறுபடி ஃபோன் ஒலிக்கிறது. மகாராஷ்டிர முதல்வர் பேசுகிறார்: ''என் ஸார்! இங்கே நான் 55 சத வீதம் மின்வெட்டு அமல்படுத்தி யிருக்கிறேன். நீங்கபாட்டுக்கு மின் உற்பத்தி நிலை திருப்திகரம் என்று அறிக்கை விட்டிருக்கிறீரே?''

''அதனாலென்ன? 55 சதம் மின்வெட்டுத் தானே? நூறு சதம் இல்லையே? நூறு சதமாய் இருந்தால் நிலைமை எவ்வளவு அதிருப்திகரமாய் இருக்கும் என்று யோசித்துப் பாருங்கள்! அப்போது 55 சதம் மின்வெட்டு திருப்திகரம் என்பதை ஒப்புக் கொள்வீரா இல்லையா?'' என்று கேட்கிறார் பா.ரா.

''அடடா, இது எனக்குத் தெரியாமல் போய் விட்டதே!'' என்று தம்மைத் தாமே நொந்துகொண்ட மகாராஷ்டிர முதல்வர் மெல்லத் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, ''அது சரி, ஆனால் இங்கே மின் நிலையங்கள் இரண்டில் நிலக்கரியே கை யிருப்பு இல்லை. மூன்றாவதாக ஒன்றில் இன்னும் ஒரு நாளைக்குக் கண்டு வரக் கூடிய அளவு நிலக்கரிதான் உள்ளது'' என்று குறைப் பட்டுக் கொள்கிறார்.

''நிலக்கரி அனுப்பப்படுவதில் தாமதம் ஏற்படுகிறதென்றால் அதை ரயில்வே அமைச்சர் கவனிக்க வேண்டும். அதனால் மின் உற்பத்தி சரியாக நடக்கவில்லை என்று கூறிவிட முடியுமா? நிலக்கரி தட்டுப்பாடின்றிச் சமயத்துக்கு வந்தால் மின் உற்பத்தி ஜாம் ஜாமென்று நடக்குமா இல்லையா?''

''உண்மைதான்'' என்று கூறி முதல்வர் ஃபோனை வைத்ததுதான் தாமதம், மறுபடி மணி அடிக்கிறது. ''பீகார் முதல்வர் பேசுகிறேன்'' என்று ஆரம்பித்தவுடனேயே, பா.ரா. உற்சாகமாக, ''நீங்கள் மின் நிலையங்களுக்கு நிலக்கரி பற்றாக்குறை என்று ஏங்க முடியாதே! பீகாரே நிலக்கரி ஏராளமாக உற்பத்தி செய்கிறதே'' என்று மடக்குகிறார்.

''மறுக்கவில்லை ஐயா'' என்கிறார் பீகார் முதல்வர். ''ஆனாலும் இங்கே 750 மெகாவாட் உற்பத்தியாக வேண்டிய இடத்தில் 613 மெகாவாட் உற்பத்திதான் நடக்கிறது. நீர்பாட்டுக்கு மின் உற்பத்தி நிலை திருப்திகரம் என்று அறிக்கை விட்டுவிட்டீர்!''

''613 மெகாவாட் உற்பத்தியைத் திருப்திகரம் என்று கூறாமல் பின்னே 300 மெகா

வாட் உற்பத்தியையா நான் திருப்திகரம் என்று கூற முடியும்? என்னய்யா பேச்சு இது?'' என்கிறார் பா. ரா.

''ஓஹோ! அந்த நோக்கில் நான் கவனிக்கத் தவறி விட்டேன். சரி சரி'' என்று அசடு வழிய ஃபோனை வைக்கிறார் பிகார் முதல்வர்.

மறுபடியும் ஃபோன் ஒலிக்கிறது. ''ஆ! இது எம். ஜி. ஆராகத்தான் இருக்கும்!'' என்று சொல்லிக் கொண்டே ஃபோனை எடுக்கிறார் பா. ரா. என்ன ஆச்சரியம்! அவரே தான்!

''கர்நாடகத்திலிருந்தும் கேரளத்திலிருந்தும் மின்சாரம் கடன் வாங்காத நாள் இடையாது. கடும் மின்வெட்டு அறிவிப்பது இன்று நாளையா என்று யோசிக்கும் வேளையில் நீர் மின்சார உற்பத்தி திருப்திகரம் என்று அறிக்கை விட்டிருக்கிறீர்!'' என்கிறார் எம். ஜி. ஆர்.

''என்ன இப்படிச் சொல்கிறீர்கள்? நீங்கள் பேசுவது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது'' என்கிறார் பா. ரா. ''தமிழ் நாட்டின் நிலைமையை மேற்கு வங்கத்துடன் ஒப்பிட்டுப் பாருங்கள்! மகாராஷ்டிரத்துடன் ஒப்பு-நோக்குங்கள்! அப்போது தெரியும், தமிழகத்தின் மின் உற்பத்தி நிலைமை எவ்வளவு திருப்திகரமாய் இருக்கிறதென்று!''

எம். ஜி. ஆர். பதில் பேச முடியாமல் திணறிப் போகிறார். பிறகு மெல்லச் சுதாரித்துக் கொண்டு, ''மேட்டூரில் மின் உற்பத்தி செய்யப் பயன்படும் நீரைக் கீழ் மட்டத்தில் மறுபடி மின் உற்பத்திக்குப் பயன்படுத்துகிறோம் என்றால் அதற்குக் கூட கர்நாடகம் ஏன் ஆட்சேபிக்க வேண்டும்?'' என்று கேட்கிறார்.

''அடடா! கீழ் மட்டத்தில் ஆற்று நீரைக் குடித்துக் கொண்டிருக்கும் ஆட்டிடம் நீரைக் கலக்குகிறாய் என்று பாய்ந்த ஓநாய் கதை உமக்குத் தெரியாதா? ஈசாப் எழுதி வைத்திருக்கிறாரே. அதற்கு ஏதாவது நிரூபணம் வேண்டுமில்லையா? இப்படி கர்நாடக அரசு நடந்து கொண்டால்தானே ஈசாப் கதைக்கு மதிப்புச் சேரும்?'' என்கிறார் பா. ரா.

''நீங்கள் கூறுவது உண்மை என்று நான் உணருகிற வேளையில் என் ரத்தத்தின் ரத்தமான கழகக் கண்மணிகள்....'' என்று எம். ஜி. ஆர். பதில் கூறி முடிக்கு முன்னர், பா.ரா. அமர்ந்திருக்கும் அறையில் விளக்குகள் அணைந்து விடுகின்றன. ஏ.ஸி. சாதனம் நின்று விடுகிறது. தட்டுத் தடுமாறி இருட்டில் ஃபோன் ரிஸீவரை வைத்துவிட்டு, ''என்ன ஆச்சு? என்ன ஆச்சு?'' என்று குரலொலி எழுப்புகிறார் பா. ரா.

''டில்லியில் மின் விநியோக நிறுவன ஊழியர்கள் கொஞ்ச நாட்களாகவே கிளர்ச்சி நடத்தி வருகிறார்கள் அல்லவா? நீங்கள் மின் உற்பத்தி திருப்திகரம் என்று அறிக்கை விட்ட முகூர்த்தம் வேலை நிறுத்தத்தில் நிஜமாகவே திடீரென்று இறங்கி விட்டார்களோ என்னவோ?'' என்கிறார் பா.ரா.வின் காரியதரிசி.

''என்ன நீகூட இப்படிப் பேசுகிறாய்? டில்லி மின் விநியோக நிறுவன ஊழியர்கள் வேலை நிறுத்தம், கிளர்ச்சி என்றெல்லாம் செய்யாதிருந்தால் மின் உற்பத்தி திருப்திகரமாகத்தானே இருக்கும்? யோசித்துப் பார்!'' என்கிறார் பா. ரா.

''ஆமாம்! ஆமாம்!'' என்று அவசரம் அவசரமாகத் தலையாட்டுகிற காரியதரிசி, ''இங்கே ரொம்பப் புழுங்குகிறது. நான் வெளியே சென்று நிற்கிறேன்'' என்கிறார்.

''அதைச் செய்! அதோடு அந்த சப்ராஸியை உள்ளே ஒரு விசிறியுடன் வந்து எனக்கு விசிறச் சொல்லு!''

அவ்விதமே சப்ராஸி வந்து விசிறும்போது, ''மின் உற்பத்தி நிலை திருப்திகரம்னு அறிக்கை விட்டுட்டீங்க, ஆனா உங்களுக்கு விசிறப் போய் எனக்கு வேர்த்துக் கொட்டுகிறது'' என்கிறார்.

''அப்படியானால் இன்னொரு விசிறி கொண்டு வா. எனக்கு நீ விசிறுகிற அதே நேரத்தில் உனக்கு நான் விசிறுகிறேன். வியர்வை அடங்கினால் மின் உற்பத்தி நிலை அதிருப்திகரம் என்று உனக்குத் தோன்றவே தோன்றாது'' என்கிறார் பா. ரா.!



''அட்டைப்படத்தில் உள்ள
குமாரி சரோஜாவின்
பார்வையில் தேங்கி யிருப்பது
வியப்பா? மருட்சியா?''
என்று கேட்டால்

**''திகைப்பு கலந்த வியப்பு''**

என்று பதிலளிக்கிறார்,

வண்ணப்படம் எடுத்த ஹரீஷ்!


அப்படித் தான் அது விளையாடும்! போகப் போக இதே உங்களுக்குப் பழகப் போயிடும்!


புள்ளையை அடக்கி வையுங்க!
அர்ஸ்


சஞ்சய்


குழந்தைகள் ஆண்டிலே என் குழந்தையும் நான் விளையாடிட்டுப் போகட்டுமே!




அப்பாடா!...
இப்போதைக்கு நிழல் இருக்கு!
சென்னை மாநகராட்சி தேர்தல் ஓராண்டு ஒத்திவைப்பு

கல்கி



1979 ஜூன் 10
சித்தார்த்தி வைகாசி 27
மலர்: 37 இதழ்: 45



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.

# வீரப்பனின் வருத்தம்

"வீரப்பன் காட்டிய வீரம்'' என்ற தலைப்பில் கல்கியில் எழுதப்பட்ட ஒரு தலையங்கம் அமைச்சருக்கு வருத்தத்தை ஏற்படுத்தியுள்ளதாக அறிகிறோம். அவருடைய அலுவலகத்திலிருந்து எமக்கு வந்துள்ள ஒரு கடிதத்திலிருந்து இதனை நம்மால் உணர முடிகிறது. கடிதத்துடன் 29-4-79 தேதியில் அமைச்சர் நிகழ்த்திய சொற்பொழிவின் முழுமையான நகல் ஒன்றும் அனுப்பப்பட்டுள்ளது. முழு உரையையும் மறுபடியும் படித்த பிறகு இந்தத் தலையங்கம் எழுதுகிறோம்.

அமைச்சருக்கும் நமக்கும் சில அம்சங்களில் கருத்து வேறுபாடே கிடையாது. அவை யாவன:

எப்படி லாபம் பண்ணுவது அல்லது நஷ்டத்தைத் தவிர்ப்பது என்ற நோக்கிலேயே பத்திரிகைகளை நடத்துபவர்கள் சிலர் செயல்படுவதால் பத்திரிகைகளின் தரம் குன்றிப் போகிறது.

சில மாதப் பத்திரிகைகளும் வாரப் பத்திரிகைகளும் விமர்சிக்கத்தக்க அளவில் கூட இல்லாமல் சீர்கேடடைந்துள்ளன.

பத்திரிகைச் சுதந்திரமும் எழுத்துச் சுதந்திரமும் பணம் பண்ணுகிற நோக்கில் பலரால் துஷ்பிரயோகம் செய்யப்படுகின்றன.

பல நாளேடுகள் விற்பனை நோக்கில் வால்போஸ்டர்கள் மூலம் மக்களைக் கவர நினைத்துச் செய்தியுடன் சம்பந்தமில்லாமல் கூடத் தலைப்புப் போட்டுப் பரபரப்பை ஏற்படுத்துகின்றன.

ஒரு தலைவருக்குச் சாதகமாக அமைய வேண்டிய செய்திகூடப் பாதகமானது போல் தோற்றமளிக்கும்படி சில சமயம் வேண்டுமென்றே செய்தி திரித்து வெளியிடப்படுகிறது.

இவற்றையெல்லாம் திருத்த முடியுமா என்றால் பத்திரிகை சுதந்திரம் பூரணமாக உள்ள நாட்டில் மக்கள் எந்த அளவுக்கு இந்தப் பத்திரிகைகளை ஆதரிக்கிறார்கள் அல்லது ஆதரவு தர மறுக்கிறார்கள் என்பதையே பொருத்திருக்கிறது.

அதிகக் கல்வி அறிவு பெறாத மக்கள் வாழ்கிற சமுதாயத்தில் தினசரிப் பத்திரிகைகளுக்கு மிகப் பெரிய பொறுப்பு இருக்கிறது.

மாண்புமிகு அமைச்சரின் மேற்சொன்ன கருத்துக்களையெல்லாம் கரவொலி எழுப்பி சபாஷ், பேஷ், பலே, என்றெல்லாம் சொல்லிப் பாராட்டுகிறோம், ஆமோதிக்கிறோம்.

இதைத் தொடர்ந்து சமீபத்திய நிகழ்ச்சிகள் சிலவற்றைக் குறிப்பிடுகிறார் அமைச்சர், பொறுப்புள்ள தேசியப் பத்திரிகைகளுக்கு வருகிறார்.

விவசாயிகள் போராட்டத்தின் போது போலீஸ் அதிகாரி ஒருவர் கொல்லப்பட்ட இடத்துக்கு விசேஷ நிருபரை அனுப்பி, போலீஸ் அத்துமீறல்களைப் பற்றிய மக்கள் கருத்துக்களைத் திரட்டி வெளியிட்ட கண்ணியமிக்கதான அந்த ஆங்கில நாளேடுகள், பந்த் நடப்பது நியாயந்தானா, சாலைகளின் குறுக்கே மரங்களை வெட்டிப் போட்டு வழிமறிப்பதும் பால் வண்டிகளைத் தகர்த்துப் பாலைச் சாலையில் ஊற்றுவதும் நியாயம்தானா என்றெல்லாம் ஏன் அபிப்பிராயம் கேட்டு வெளியிடவில்லை என்று வினவுகிறார்.

இத்துடன் அமைச்சர் நிறுத்திக் கொண்டிருந்தாலும் நாம் ஆட்சேபிப்பதற்கில்லை. ஆனால், முன்னிருந்த ஆட்சிக் காலத்தில் அந்த ஆட்சியை எதிர்த்து

ஆனந்தவிகடன், குமுதம், செல்வாக்கு மிக்க ஓர் ஆங்கிலப் பத்திரிகை (பெயர் குறிப்பிட அமைச்சர் விரும்பவில்லை) ஆகியவை எழுதியதற்காக அவை தொல்லைகளுக்கு உள்ளாயின என்பதை அமைச்சர் குறிப்பிட்டு, 'அது போன்ற நிலை இன்று ஏற்பட்டால் பாதுகாப்புக்கும் அமைதி காக்கவும் யாரை அழைப்பீர்கள்? அவர்கள் மீது இன்று குற்றம் சுமத்தி விட்டால் நாளை அவர்கள் உங்களுக்கு எப்படிப் பாதுகாப்பு அளிப்பார்கள்?' என்று வினவும் போதுதான் அமைச்சர் தடம் புரண்டு விடுகிறார்.

இதற்கு மாறாக அமைச்சர், 'அரசை விமர்சித்து, எதிர்த்து நீங்கள் எழுதினாலும் உங்களுக்கு முந்தைய ஆட்சிக் காலத்தில் தரப்பட்டது போன்ற தொல்லைகள் தரப்படமாட்டாது. அப்படியே ஏதாவது தொல்லைகள் நேர்ந்தாலும், போலீஸ் வன்முறைகளை நீங்கள் இன்று கண்டித்து எழுதிய போதிலும் உங்களுக்கு முழுப் பாதுகாப்பைப் போலீஸ் தரும்' என்று பேசியிருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்? அப்போது அவரது ஜனநாயகப் பண்பையும் பெருந்தன்மையையும் நாம் பாராட்டலாம் அல்லவா?

என்ன செய்வது, சிந்திய நெல்லைத் திரட்டலாம்; சொல்லைத் திரட்டவா முடியும்?

---




**கண்ணதாசன்**

மண்ணகம் முழுதும் இன்று
மனிதர்கள் சிலையா யிற்று
கண்ணிலா வாழ்க்கை வாழ்ந்த
கயவர்க்கும் சிலைவைத் தார்கள்
எண்ணரும் தியாகம் செய்தார்க்(கு)
இடமில்லை சிலைகள் வைக்க
புண்ணாகிப் புலம்பும் நெஞ்சே
புனிதர்கள் நிலைபார்த் தாயா?

வீட்டுக்கே சொத்துச் சேர்த்து
வெறும்பேச்சுப் பேசி வாழ்ந்தோர்
ஏட்டிலே எழுத வொண்ணா
எழுத்தெலாம் எழுதி வாழ்ந்தோர்
பாட்டையில் சிலையாய் நின்று
பரிகசிக் கின்றார் நெஞ்சே
நாட்டுக்கே வாழ்ந்து மாண்டோர்
நலங்கெட்ட நிலைபார்த் தாயா?

ஊர்ப்பணம் திருடிச் சேர்ப்பார்
உள்ளமே இருட்டாய்க் கொண்டார்
ஆர்ப்பரித் தளப்பார் இந்த
அவனியை வெல்வார் போல
வேர்ப்புறம் வெட்டிப் போடும்
வீணர்கள் வாழ்ந்தார் நெஞ்சே
தேர்ப்பெறும் தெய்வங்கட் கோர்
சிலையிலை நீபார்த் தாயா?

மூலையில் காந்தி நிற்பார்
முடுக்கினில் நேரு நிற்பார்
சாலையில் யாரோ நிற்பார்
சரித்திரம் எழுதப் பார்ப்பார்
ஆலையில் கரும்பைப் போல
அணுவெலாம் துடிக்கும் நெஞ்சே
மாலையைத் தெருவில் வீசும்
மானிடர் செயல் பார்த்தாயா?

இருட்டுக்கு வெளிச்சம் தந்தார்
இழப்புக்கோர் ஈடும் தந்தார்
குருடுக்குக் கண்கள் தந்தார்
குவலயப் பெருமை காத்தார்
அருட்பெரும் தலைவர் அன்னார்
யாரறி வார்கள் நெஞ்சே
பொருள்பெறும் வணிக மாக்கள்
புகழ்தலை நீபார்த் தாயா?

என்னதான் முயன்ற போதும்
இந்நாடு உருப்ப டாது
மன்னவன் பசியில் சாக
மடையர்கள் கொழுத்து வாழ
தென்னவர் நாடு செய்தால்
தீயில்தான் சாம்ப லாகும்
அன்னையே தமிழே இந்த
அறம்வெல்ல வேண்டு கின்றேன் !



# உங்களுடைய அன்றாட அலுவல்களை மறுபடியும் துவக்க வேண்டுமா?

# க்ளாக்ஸோஸ்-D®

## களைப்புடன் போராடி உங்களுக்கு உடனடி சக்தியைத் தருகிறது.




dCa GL 54 TAM R

# இமைகள்

**கி.ராஜேந்திரன்**

**அத்தியாயம் 40**

துரிதமாக சத்யா உடல் நலம் பெறவேண்டும் என்ற ஆவலில் கலோசனா அவனுக்குப் பரிந்து பரிந்து உபசரித்தாள். அரை மணிக்கொருதரம் ஏதாவது சாப்பிடக் கொண்டு வந்தவள், இப்போதும், ''அண்ணா ஹார்லிக்ஸ்'' என்று கூறியபடியே வந்து டபராவில் ஆற்றத் தொடங்கினாள்.

''இப்போ வேணும் கலோ! பசியே இல்லை'' என்றான் சத்யா.

''நோ! நோ! டாக்டர் சொல்லி இருக்கிறார். அவர் யோசனைப்படி ஒரு சார்ட் போட்டுத் தயாராக வைச்சிருக்கேன் பாரு'' என்று கூறியவள் சுவரில் தொங்கிய ஒரு கால அட்டவணையைத் தன் நீண்ட அழகிய கழுத்தை ஒடித்தும் மலர்க் கண்களின் பார்வையை வீசியும் சுட்டிக் காட்டினாள். தாயின் மறைவும் சகோதரன் பட்ட வேதனையும் அளித்த துன்பத்தை மீறி அவள் இதயத்தில் இன்பப் பெருக்கெடுத்துக் கொண்டிருப்பதையும் அதனால் அவள் உடல் மெருகேறிப் பொலிவதையும் சத்யாவினால் உணர முடிந்தது. அதற்குக் காரணம் தானே தேர்ந்தெடுத்த சிறந்த வாழ்க்கைத் துணைக்கு அங்கீகாரம் கிடைத்து விட்டது; இடையூறின்றிக் காதலுக்குத் தன்னைப்பூரணமாக ஐக்கியப்படுத்திக் கொள்ளும் நாள் வெகு தூரத்தில் இல்லை என்ற உறுதிப்பாடாக அன்றி வேறென்னவாக இருக்க முடியும்? கிணற்று நீரை ஆற்று வெள்ளம் அடித்துக் கொண்டு போக முடியாதுதான், ஆனால் மூடி மறைத்துவிடுமல்லவா? கலோவின் துயரங்களை வற்றா மகிழ்ச்சிப் பிரவாகம் மறைத்துக் கொண்டிருந்தது. 'பிரமீளா தன்னை மணந்து கொள்ளவும் இதே போல் அவள் பெற்றோரின் முழு மனத்துடன் கூடிய அங்கீகாரம் கிடைத்து விடுமானால் எவ்வளவு நன்றாக இருக்கும்?' என்று எண்ணும்போதே சத்யாவுக்கு நெஞ்சு குறுகுறுத்தது. பிங்கி தன் பெற்றோரையும் எதிர்த்துக் கொண்டு தன்னுடன் வாழ வரலாம். தானும் அதில் உறுதியாக இருக்கலாம். என்றாலும் இருதரப்புப் பெற்றோரின் மகிழ்ச்சி மிக்க அங்கீகாரமும் இருந்தால் அதனால் ஏற்படும் மனநிறைவுக்கு ஈடாகுமா?

சத்யா ஒரு நீண்ட பெருமூச்சை வெளிப்படுத்துகையில், பட்டியல் சுவரில் மட்டுமல்ல, தன் மனத்திலும் பதிந்திருக்கிறது என உணர்த்துபவள் போல் கலோசனா மளமளவென்று சொல்லிக் கொண்டு போனாள்: ''இப்ப மணி ஆறரை. ஹார்லிக்ஸ் சாப்பிடறே, அடுத்து எட்டு மணிக்கு சூப்,பருப்பு சாதம், கோஸ் கறி, தயிர் சாதம்; அப்புறம் ஒன்பதுக்கு ஓவல்; ராத்திரி நடுவே எழுந்தால் குளுகோஸ் வாட்டர்...''

ஹார்லிக்ஸ் அருந்துவதைப் பாதியில் நிறுத்தி டம்ளரை வைத்துவிட்டு, ''சிவ சிவா! என்னை ரோட் ரோலராக்கி விட்டுத்தான் கட்டிலை விட்டு இறக்குவீங்க போலிருக்கே! புளி மூட்டை மாதிரி ஆயிட்டேன்னா அப்புறம் எனக்கு யார் பெண் கொடுப்பாங்க?'' என்று வேடிக்கையாகக் கேட்டான் சத்யா. சொல்லி வைத்தாற் போல் அந்தச் சமயம் பார்த்து வெளியே, ''ஸார்!'' என்று குரல் கேட்டது. வாசல் பக்கம் எட்டிப் பார்த்துத் திரும்பிய கலோசனா, ''அண்ணா! 'யார் பெண் கொடுப்பாங்க'ன்னு கேட்டியே, உடனே குரல் கொடுக்கிறார் பார்த்தியா, யோகேஷ்!'' என்றாள், பரபரப்பும் ஆனந்தத்துடன் கூடிய ஆச்சரியமும் அடைந்தவளாக.

சத்யாவின் மனத்தில் ஒரு கிளுகிளுப்பு உருவாயிற்று. 'ஏன், எதற்காக வருகின்றார்கள்?' என்று அறியும் ஆவல் பொங்கியது. 'கலோ சொன்னது போல் கல்யாணம் பேசத்தான் வருகிறார்களோ?' கூடவே அவர்கள் தன்னை அவமானப் படுத்தி அனுப்பியது நினைவுக்கு வர, அவன் மனம் பனிப் பாறையாக இறுகியது.

''சத்யா! யார் வந்திருக்காங்க, பாரு!'' என்று கூறியபடியே யோகேஷையும் அவர் மனைவி லலிதாவையும் உடன் அழைத்துக் கொண்டு அந்த அறைக்குள் நுழைந்தார் வைத்தியலிங்கம்.

''எதுக்குப்பா எனக்கு உடம்பு சரியில்லாத போது கண்ட கண்டவங்களையெல்லாம் வரச் சொல்றீங்க?'' என்று கேட்ட சத்யா, கோபம் மாறாமல் முகத்தைக் கடுமையாக்கிக் கொண்டு வேறுபுறம் திரும்பினான்.

''கண்ட கண்டவங்க இல்லேடா! யோகேஷ் மிஸஸ் யோகேஷ், பிங்கி எல்லாரும்தான் வந்திருக்காங்க. நான் வரச் சொல்லலே. அவங்களாகவே தான் வந்திருக்காங்க. நம்ம வீட்டிலே ஒரு துக்கச் சம்பவம் நடந்தது. ஒரு கஷ்டம் அல்லது சிரமம் வந்ததுன்னா நண்பர்கள் நாலு பேர் ஆறுதல் சொல்ல வர மாட்டாங்களா?'' என்று மகனைக் கண்டிக்கும் தொனியில் சொன்னார் வைத்தியலிங்கம்.



''அப்பா! அவங்க என் நண்பர்களும் இல்லே. என்னை அவங்க துக்கம் விசாரிக்கவும் வேண்டாம்'' என்றான் மகன், கடுமையாக.

யோகேஷ் அறைக்குள் நுழையாமல் அதன் வாசலில் நின்றபடியே, ''ஸார்! சத்யா கோபப் படறதிலே நியாயம் இருக்கு. நாங்க ஆணவத்தோடு தப்பாப் பேசி நடந்துக்கிட்டோம். ஆனா அதுக்காக வருத்தப் படறோம்; மன்னிப்பும் கேட்டுக்கறோம்'' என்றார்.

''கேட்டியா சத்யா?'' என்றார் வைத்தியலிங்கம்.

''நல்லா கேட்டேன். ஆஸ்க் தெம் டு கோ டு ஹெல்! என்னால் அவங்களை மன்னிக்கவே முடியாது!''

''சத்யா, நீ என்னிடம் உன்னுடைய நடத்தைக்காக மன்னிப்புக் கேட்டு, மன்னிப்புக் கிடைக்குமான்னு ஏங்கிப் பிராயச்சித்தம் பண்ணறேன்னு சொல்லி எத்தனை மணிநேரம் ஆகியிருக்கும்? அதுக்குள் மறந்துட்டியா? உனக்குக் கிடைத்த அந்த வாய்ப்பை இவங்களுக்கு நீ மறுத்து விடலாமா?''

சத்யா மௌனமானான். சற்று நேரத்துக்குப் பிறகு, ''அவங்களை வரச் சொல்லுங்கப்பா'' என்றான்.

யோகேஷ் அவன் அருகில் வந்து அவன் கரத்தைப் பற்றினார். ''நாங்க புருஷனும் மனைவியுமா சேர்ந்து உன் உள்ளத்தைச் சொல்லம்புகளாலே துளைச்சு எடுத்தோம். அது போதாதுன்னு உடம்பில் நாலு இடத்திலே கத்திக் குத்து வேற வாங்கிண்டு வந்திருக்கே!'' என்றார் வருத்தத்துடன்.

''அந்தக் கத்திக் குத்துக்கள்தாமே உங்க மனசை மாற்றியிருக்கு! அதனால் நான் சந்தோஷப் படறேன், ஸார்'' என்றான் சத்யா.

''எங்க மனசு இப்போதாவது சரியாகப் பண் பட்டதென்னு நீங்க சந்தோஷப்பட நீங்க. ஆனா எனக்கு என்ன ஆச்சர்யம்னு எங்க மகளாப் பிறந்



தும் பிங்கி எங்களைப் போல் கர்வமடையாமல் தெளிந்த உள்ளத்தோட தொடர்ந்து இருந்து வந்திருக்காளே, அதுதான்!'' என்றாள் லலிதா.

''ஆமாம் ஆமாம்'' என்று ஆமோதித்தார் யோகேஷ். ''ஏதோ கொஞ்சம் மாடர்னா டிரஸ் பண்ணிப்பா, கிரிக்கெட் ஆடறேம்பா. அதைப் பார்த்து யாரும் ஏமாந்துடாதீங்க. அவள் உள்ளம் ரொம்ப உயர்வானது. உங்க வீட்டுக்கு உங்க மருமகளா வந்தா இன்னும் பண்பட்டுப் போகும். மறுக்காம ஏற்றுக் கொள்ளுங்க ஸார்!'' என்றார் வைத்தியலிங்கத்தைப் பார்த்து.

''எனக்குத் தெரியாதா என்ன? என் மருமக தங்கமானவளாச்சே!'' என்றார் வைத்தியலிங்கம்.

''பிறகு என்ன, அண்ணாவும் மன்னியும் கிரிக்கெட் பாட்டும் பாலும் போல் ஒற்றுமையா, சந்தோஷமா இருப்பாங்க'' என்றாள் சுலோசனா.

''சரிதான் போ! கிரிக்கெட் பாட்டும் பாலும் ஒற்றுமையாகவா இருக்கும்?'' என்ற பிங்கி சத்யாவைப் பார்த்து. ''என்னால் உங்களிடம் அடிக்கடி அடி வாங்கிக் கொண்டு பவுண்டரிக்கு உருண்டோட முடியாது! வேணும்னா ஸ்டம்ப்ஸ்ஸும் பெய்ல்ஸ்ஸுமா இருப்போம்'' என்றாள்.

''பெய்ல்ஸ் கூடத் தெறிச்சு விழற சந்தர்ப்பங்கள் உண்டு பிங்கி! அதனால் ரெண்டும் கிளவ்ஸ்ஸா இருப்போம்! கரத்திலிருந்து கிளவ்ஸை நாமே கழற்றினால்தான் உண்டு, இல்லையா?'' என்று கேட்ட சத்யா அப்போதே பிங்கியின் கரத்துக்குத் தனது இரு கைகளாலும் உறையிட்டான். இருவருக்குமே உடம்பெல்லாம் கிளுகிளுத்தது. பற்றிய சத்யாவின் கரங்கள் மேலும் படரத் துடித்தன. சிறைப்பட்ட பிரமீளாவின் கரத்தைப் பார்த்து அவளுடைய மற்ற அங்கங்கள் பொறாமை கொண்டு பொங்கின. 'ஓர் எல்லைக்குள் அடங்கிய இந்த ஸ்பரிசமே இவ்வளவு இன்பமளிக்க முடியுமென்றால் கட்டுப்பாடு அற்ற அந்த நாள் வரும் போது ...' என்று இருவர் மனங்களும் எண்ணிச் சிலிர்த்தன. மனத்தின் செய்திகளை நாவசைத்து வெளிப்படுத்த முடியாத நிலையில் கண்களில் கொண்ட கிறக்கமும் உதடுகளின் துடிப்பும் ஒருவருக்கொருவர் உணர்த்தின.

''பிங்கியோட கையை விடு சத்யா! கல்யாணத்துக்கு அப்புறம் ரெண்டும் கிளவ்ஸ்ஸாக அந்நியோன்னியமாக இருக்க அவ சம்மதிச்சதுக்காக இப்பவே அவ கையை விலங்கிட்ட மாதிரி விடாம பிடிச்சுக்கிட்டிருந்தா எப்படி? விடு! விடு!'' என்று அண்ணனைக் கேலி செய்தாள் சுலோசனா.

அடக்க மாட்டாமல் கொல்லென்று அனைவரும் அது கேட்டுச் சிரித்து விட்டனர். பிங்கி தன் கரத்தை விடுவித்துக் கொண்டாள். ''அடேடே! பிங்கி கூட வெட்கப்படக் கற்றுக்கிட்டாளே! அவ முகம் சிவந்து நாணுவதைப் பாருங்களேன்!'' என்றாள் லலிதா உற்சாகமாக.

மீண்டும் பொங்கிய சிரிப்பு அலை சற்று ஓய்ந்ததும், ''ஸார்! இப்படி நாங்க சிரிக்கிறது உங்களுக்கு வேதனையாக இருக்குமோ என்னமோ?'' என்று கேட்டார் யோகேஷ்.

''இல்லையே, தனம் என்னோடு கூடவே எப்போதும் இருக்கா. அவளும் இந்தச் சிரிப்பிலே கலந்து கொண்டு மகிழறா. அது எனக்குத் தெரியும். நீங்க கவலைப் படாதீங்க'' என்றார் வைத்தியலிங்கம்.

''நீங்க தப்பா நினைக்கல்லேன்னா இன்னொரு விஷயம் சொல்றேன்'' என்று ஆரம்பித்தார் யோகேஷ். ''சத்யாவின் மனசை நான் முறிச்சுட்டேன். இப்போ அது சரியாயிடுச்சின்னாலும் நான் பிராயச்சித்தமா ஏதாவது செய்ய விரும்பறேன். உங்க கம்பெனி ரொம்ப சிரமப்படறதா கேள்விப் பட்டேன். தொழிலாளர்களோடு நீங்க நடத்தின பேச்சு வார்த்தை முறிஞ்சுட்டதாகவும் தெரிய வந்தது. அதனால்...''

''சொல்லுங்க'' என்றார் வைத்தியலிங்கம், புன்முறுவலுடன்.

''பத்துப் பர்ஸண்ட்டோ பதினைந்து பர்ஸண்ட்டோ அவங்க கேட்கிற போனஸ்ஸைக் கொடுத்துடுங்க. அதுக்கு நான் வட்டியில்லாமல் பணம் அட்வான்ஸ் பண்ணறேன். ஐந்து வருஷத்திலே திரும்பத் தந்தாப் போதும். முடியாமல் போனாலும் பாதகமில்லை. இப்போ தொழிலகம் மறுபடி இயங்கத் தொடங்கறதுதான் முக்கியம்!''

''உங்க நல்லெண்ணம் எனக்குப் புரியுது யோகேஷ். உங்க உதவிக்கு நன்றி'' என்றார் வைத்தியலிங்கம். ''ஆனால் உங்க கடனுதவி எனக்குத் தேவைப்படாது. ஏன்னா நான் என் தொழிலகத்தைத் தொழிலாளர்களுக்கே கொடுத்துடத் தீர்மானிச்சுட்டேன். இன்னும் கொஞ்ச நேரத்தில் வக்கீல் இங்கே வருவார்!''

''என்ன நிஜமாகவா? என்னால் நம்ப முடியல்லையே, இவ்வளவு தாராள மனம் உங்களுக்கு எப்படி வந்தது?''

''தினம் திருப்புகழ் படிக்கிறேன், சுப்பிரமணிய புஜங்க ஸ்தோத்திரம் பாராயணம் பண்ணறேன். ஒருவித பற்றற்ற மனப்பான்மையை இவை தோற்றுவிப்பதை என்னால் உணர முடியுது!''

''நல்லவேளை, சொன்னீங்க!'' என்றார் யோகேஷ். ''ஏதுடா, நமக்கும் வயசாகிக்கிட்டு வரதே, கிருஷ்ணா ராமான்னு நாலு

---

உடல் நலமில்லாமல் மருத்துவமனையில் படுத்திருந்தார் ஓர் ஊழியர். அவருடைய மானேஜர் அவரிடம் வந்து ஆறுதலாகப் பேசினார்: ''உங்கள் உடம்புதான் முக்கியம். அதை முதலில் கவனித்துக் கொள்ளுங்கள். ஆபீஸ் வேலையைப் பற்றிக் கவலையே படாதீர்கள். உங்கள் வேலையை உங்கள் நண்பர்கள் பார்த்துக் கொள்வதாகச் சொன்னார்கள். ஒரே ஒரு விஷயம். இத்தனை நாட்கள் நீங்கள் ஆபீஸில் என்ன பண்ணிக் கொண்டிருந்தீர்கள் என்று சொன்னால் தேவலை...'' பார்ட்டி ஹ்யூமர்.—ராமுசாமி.



வார்த்தை சொல்வோம்னு நேற்றுதான் சுந்தர காண்டம் புத்தகம் ஒன்று வாங்கினேன். அதை உங்களுக்கே பரிசாக் கொடுத்துடறேன்! இனி அதைத் தொடவே எனக்குப் பயமாயிருக்கும்!'' என்றார்.

''அப்பா!'' என்று அழைத்த சத்யா, ''சொத்து மீது இவ்வளவு ஆசை வைச்சிருக்கிற அவரிடம், அவருக்கு வரப்போகிற மாப்பிள்ளை ஓர் ஒட்டாண்டிங்கிறதைத் தெரியப் படுத்திடுங்க. அப்புறமா வருத்தப் படக் கூடாது இல்லையா?'' என்றான்.

''அதனால் பாதகமில்லை, என்னிடம் ஐந்து தலைமுறைக்கு வேணும்கிற சொத்து இருக்கு'' என்றார் யோகேஷ்.

''அதை நான் தொட மாட்டேன். சுயமா சம்பாதிச்சுத்தான் பிங்கியைக் காப்பாற்றுவேன்'' என்றான் சத்யா.

''நானும் என் கணவர் சம்பாதிப்பில்தான் சிக்கனமாக் குடும்பம் நடத்துவேன். அப்பா அம்மாவை நயா பைசாவுக்கு எதிர்பார்க்க மாட்டேன்'' என்றாள் பிங்கி.

''இப்ப என்ன சொல்றீங்க யோகேஷ்? இருக்கிற ஐசுவரியத்தை யெல்லாம் என்ன செய்யப் போறீங்க?'' என்று மகளையும் மருமகளையும் பற்றிய பெருமிதத்துடன் புன்முறுவல் பூத்துக் கேட்டார் வைத்தியலிங்கம்.

''இனி பிறக்கப் போகிற பிள்ளைக்காகக் கட்டிக் காக்கிறேன்! லலிதாகிட்டே எனக்கு இன்னும் நம்பிக்கை இருக்கு!'' என்று ஒரு போடு போட்டு, மனைவியின் முதுகில் ஒரு ஷொட்டும் கொடுத்தார் யோகேஷ்!

## அத்தியாயம் 41

ஆனந்த் பேசியதைக் கேட்டுத் திடுக்கிட்டாள் நித்யா. பின்னர், ''தெய்வீகமான எழிலை மானுடத்தின் விகார எண்ணங்களால் அசிங்கப் படுத்தாதீங்க. உங்களாலே எத்தனை பேருக்கு எவ்வளவு கஷ்டம்னு நினைச்சுப் பார்த்துக்கிட்டிருக்கேன். நீங்க என்னடான்னு தெய்வத்தையே கஷ்டப்படுத்திச் சோதிக்கறீங்க. இது அடுக்காது. வேண்டாங்க.'' என்றாள்.

''பல பேருக்குக் கஷ்டம் என்னால் மட்டும்தானா ஏற்பட்டது? உன்னாலேயும்தான். நீதானே சத்யாவை உன் வசப்படுத்தினே. அந்தச் சமயத்தில் நான் போட்டோ எடுத்துக் கொள்ளவும் அனுமதிச்சே. அதிலிருந்து ஆரம்பித்ததுதானே?'' என்று கேட்டான் ஆனந்த்.

''உண்மைதான். இரண்டாயிரம் ரூபாய் தரதாச் சொன்னீங்களேன்னு பணத்தாசையால் உடன்பட்டேன். ஆனா இத்தனை விபரீதங்கள் நிகழும்னு தெரிஞ்சிருந்தால் சம்மதித்திருக்கவே மாட்டேன்.''

''அப்படி என்ன பெரிய விபரீதங்கள் நடந்து போச்சு, இப்போ?'' என்ற ஆனந்த் பெ.ஹும் ஒரு மிடறு விஸ்கியை விழுங்கினான்.

''என்னவா? பட்டியல் போடவா?'' என்றாள் நித்யா. விரல்களை மடக்கியபடி தொடர்ந்தாள்: ''சத்யா, பிரமீளா காதலில் முறிவு ஏற்பட்டது. சத்யா ஒரு உபயோக மற்ற பலவீனனாக மாறினான்; மதுவுக்கும் மங்கைக்கும் அடிமையானான்; அகவினி என்டர்பிரைஸஸ் கம்பெனிக்கு ஏகப்பட்ட நஷ்டம் உண்டாயிற்று; தொழிலாளர் தகராறு உருவாகி முற்றியது; வைத்தியலிங்கத்துக்கு ஹார்ட் அட்டாக் வந்தது; சத்தியா கத்திக் குத்துப் பெற்றான்; சத்யாவின் தாய் இறந்து போனாள்; பிரமீளாவுக்கும் அவள் பெற்றோருக்கும் இடையே சத்யா காரணமாக மனஸ்தாபம் வளர்ந்தது; அருள்ராஜுக்கும் அவர் மகனுக்கும் இடையில் கலோசனாவை நீபக் மணப்பது பற்றி வாக்குவாதம், கலோசனா துயரக் கடலில் ஆழ்ந்து அடைந்த கவலை...''

ஆனந்த் சிரித்தான்: ''ஏன் நிறுத்திட்டே? சத்தியாவைக் கத்தியால் குத்தினானே ராஜசேகர், அவன் ஜெயிலில் இருக்கான். அவன் மனைவி குழந்தைங்க வருத்தப்படறாங்க. அவர்கள் குடும்ப நலனைக் கவனிக்கிற பொறுப்பு என் தலையில் சுமந்தது... அதையும் சேர்த்துக்க'' என்று கூறி மது டம்ளரைக் காலி செய்து வைத்தான்.

நித்யாவுக்குச் 'சுரீல்'என்று ஏதோ தாக்குவதுபோல் மனத்தில்பட்டது. 'என்ன சொல்கிறான் இவன்?' சந்தேகத்துடன் வினவுவது போல் காட்டிக் கொள்ளாமல் சர்வ சாதாரணமாகப் பேசினாள்: ''நீங்க ஏன் கவனிக்கணும் அவங்க நலனை?''

''பின்னே? வைத்தியலிங்கமா தம் மகனைக் கொல்ல முயன்றவன் குடும்பத்துக்கு உதவுவார்?''

''அப்படியானா உங்க நண்பனைக் கொல்ல முயன்றவன் குடும்பத்துக்கு நீங்க மட்டும் ஏன் உதவணும்?'' என்ற நித்யா ஆனந்தின் அருகில் அமர்ந்து புதிதாகக் கலந்த டிரிங்கை அவன் கரத்தில் வைத்தாள். அவன் கழுத்தில் கீழிருந்து மேலாக அவளுடைய ஒரு விரல் கோடுகள் போட்டது!

கவித்துக் கொண்டே, ''இரக்கம்தான் காரணம்'' என்றான் ஆனந்த். ''ராஜசேகர் சத்யாவைக் கொல்ல முயன்றதே எனக்காகத்தானே!''

''உங்களுக்காகவா? புரியவில்லையே?''

''இன்னும் புரியும்படி சொல்லணுமா? ஆல் ரைட்! சத்யாவைக் கொல்லும் முயற்சியில் இறங்குமாறு ராஜசேகரைத் தூண்டி விட்டதே நான்தான், போதுமா?'' என்று ஒவ்வொரு வார்த்தையையும் நிறுத்தி நிதானமாகக் கூறினான் ஆனந்த். (தொடரும்)



திருச்சியில் உடைந்த பிளாஸ்டிக் சாமான்களுக்கு எடைக்கு எடை அச்சு வெல்லம் தருகிறார்கள். அதே போல் பழைய இரும்புச் சாமான்களுக்கு எடைக்கு எடை வெங்காயம் தருகிறார்கள்.

—பொன்மலை பரிமளம்

# Kalki Shopping Page

## HMV STEREO 1010




**HMV STEREO SYSTEMS**

*Available at :*

**RAJA RADIO & ELECTRICALS,**
228, Royapettah High Road,
Madras-600 014  Phone : 841533

## supertrack 230

The professional stereo player



Sophisticated Pick up Arm
Magnetic Cartridge with
Diamond Stylus
Hydraulic Cueing-Floating Sub-chassis



Rs 1027 plus taxes

HMV His Master's Voice

*Available at :*

**SHANTHI ELECTRONICS,**
821, Mount Road,
Madras-600 002  Phone : 81594

## 30 MONTHS Guarantee

COVERING 3 SUMMERS

**Bharat TV**

BACKED BY THE MOST ADVANCED HAL TECHNOLOGY WITH IMPORTED PICTURE TUBE



NOW ON A SPECIAL SUMMER OFFER FROM

TWO ICs • DOUBLE SPEAKERS • MULTI-CHANNEL
• LOWER POWER CONSUMPTION
• PROMPT AFTER SALES SERVICE

**T V Traders**
(Qualified and Experienced Engineers)
ALWARPET, ANNANAGAR.  PHONE: 71238, 614899

## ஸ்ரீ ராஜேஸ்வரி ஹால்

பட்டு

121, ராஜ வீதி
கோயமுத்தூர்-641001
போன் : 25859

**உஷா**
சாரி பாரடைஸ்
333, ராஜ வீதி, கோயமுத்தூர்-641001
போன் : 33369

# பாட்டிமார்களும் பேத்திமார்களும்

## ஜெயகாந்தன்

### 11. சிங்காரத்தின் 'இங்கிலீசு' படிப்பாசை

"எங்கே, சாமி திடீர்னு காணாமப் போயிடுச்சு?" என்று கேட்டவாறு தோப்பின் நடுவே கிடந்த கயிற்றுக் கட்டிலில் வந்து உட்கார்ந்தான் சிங்காரம். சற்றுத் தூரத்தில் மகாராஜமாப்பிள்ளை பெட்டியடியில் உட்கார்ந்து கணக்கெழுதிக் கொண்டிருந்தார். வேலையாள் ஒருவன் நல்ல மரமாகப் பார்த்து இளநீர் பறித்துப் போட்டுக் கொண்டிருந்தான். 'தொப்'பென்ற ஓசையுடன் ஒரு குலையைப் பறித்துக் கீழே போட்ட சப்தத்தில் கணக்கெழுதிக் கொண்டிருந்த மாப்பிள்ளை திடுக்கிட்டுப் பார்த்த போது சாமியார் அதைக் கண்டு சிரித்தார்.

இளநீரைச் சீவி அதில் ஓலையைச் செருகிக் குடிப்பதற்கு வாகாய்ச் சிங்காரத்திடம் கொண்டு வந்து நீட்டினான் ஒருவன்.

"அத்தானுக்குக் கொண்டு போய்க்கொடு. சாமியாருக்குக் கொடு — எனக்கு வேணும், சாப்பிடப் போகணும்" என்று சிகரெட்டைக் கொளுத்திப் புகை விட்டான் சிங்காரம்.

விளக்குச் சாமியார் மண் தரையில் சம்மணமிட்டு உட்கார்ந்து இளநீரை இரண்டு கைகளிலும் வாங்கி அண்ணாந்து சாய்த்துக் கொண்டு 'குடுகுடு'வெனச் சத்தமெழக் குடித்தார். குடித்து முடித்துப் பெரிதாக ஏப்பமிட்டவாறு "நம்ப சாப்பாடு முடிஞ்சுது" என்று வயிற்றைத் தடவி விட்டுக் கொண்டார்.

சிங்காரம் கால் மீது கால் போட்டுச் சம்மணமிட்ட நிலையில் உட்கார்ந்து இடது காலின் பாதத்தை ஆட்டியவாறு சிகரெட்டை ரசித்துப் புகை விட்டான். "சாமி எனக்கென்னமோ வரவர இந்தத் தோப்பும் துரவும் வயலும் வெளியும் வெச்சுக்கிட்டு வாழற வாழ்க்கை புடிக்கல்லே! இங்கிலீசு படிக்காமப் போனது பெரிய தப்புத்தான்.... படிச்சிருந்தால் கெவுருமெண்ட் உத்தியோகம் பார்க்கலாம். இனிமே அதுக்குத்தான் சாமி மரியாதை, மதிப்பு எல்லாம்! நீ ஆயிரம்தான் சம்பாதியேன்! அஞ்சு ரூபா கெவுருமெண்ட் உத்தியோகம் மாதிரி ஆகுமா?" என்றான். அவன் அதைப் பற்றி ரொம்பவும் ஆழ்ந்து யோசித்தான்.

அவன் யோசிக்கிற போது தலையை அண்ணாந்து கண்களை மூடிக் கொண்டு இடது பாதத்தை வேகமாக ஆட்டிக் கொண்டிருந்தான். அந்த நிலையில் அவனது கம்பீ



ரத் தோற்றத்தைக் கண்ட விளக்குச் சாமிக்கு மருதேசன் பிள்ளையின் ஞாபகம் வந்தது. அவரும் இதே மாதிரிதான் உட்கார்ந்து யோசித்து யோசித்து ஏதாவது பேசுவார். பேச்சுக்கிடையே சாமியாரைப் பரிகாசம் பண்ணிச் சிரிப்பார். தனது கவலை தரும் சிந்தனைகளை இப்படிச் சிரித்துச் சிரித்துப் பரிகாசமாக்கி மறக்கவே முயல்வார். இந்தப் பொல்லாத பிள்ளை சிங்காரத்தைக் குறித்து 'இவன் எங்கே ஆணுமில்லாமல் பெண்ணுமில்லாமல் இரண்டுங் கெட்டானாகி விடுவானோ' என்று மருதேசன் பிள்ளை பட்ட கவலையை இப்போது நினைத்துப் பார்த்தார் சாமியார். சற்று முன் இவனையும் வெள்ளையம்மாளையும் இணைத்துக் கதை பரப்பி நிற்கும் இவனது சகோதரிகளைப் பற்றிக் கோதை கவலைப்பட்டதையும் நினைத்துக் கொண்டு 'மருதேசன் பிள்ளை இல்லையே இதைக் கேட்டு மகிழ்றதுக்கு' என்று எண்ணி, நிமரெனச் சிரித்தார் சாமியார். அவரது சிரிப்பினுல் யோசனை கலைந்த சிங்காரம் கண் விழித்துச் சாமியாரைப் பார்த்து அவரது சிரிப்பு தனக்கும் தொற்றிக் கொள்ளச் சிரித்தவாறே கேட்டான்: ''என்னுத்துக்குச் சாமி அப்பிடி சிரிக்குது? நான் சொன்னது சிரிப்பாத்தான் இருக்கும் சாமியாரே ... இந்தக் காலத்திலே இங்கிலீஷ் படிப்புப் படிச்சவனுக்குத்தான் ஐயா மரியாதை! நாம்ப சும்மா நமக்குள்ளே இப்படி சிரிச்சுச் சீரழிய வேண்டியதுதான் ... உங்களுக்கென்ன சாமியாரு? எதுக்கும் சிரிப்பாத்தானிருக்கும்!'' என்று தான் சொன்னதற்காக இவர் சிரிக்கிறார் என்று நினைத்துக் கொண்டு பேசினான் சிங்காரம்.

சாமியார் அதை மறுக்காமல் ''அதுக்குத் தானே உம்மை இங்கிலீஷுப் படிப்புப் படிக்க வைக்க உங்க சின்னம்மா அவ்வளவு பாடுபட்டாங்க? அப்பல்லாம் பள்ளிக்கூடம் போறேன்னு அக்கரைக்குப் போயித் திரிஞ்சீரே.. இப்ப கவலைப்பட்டு என்ன பண்றது...ஆனு ஒண்ணு புள்ளே, படிக்கறதுக்கு வயசு, பள்ளிக்கூடம் இதெல்லாம் முக்கியமில்லே ... இப்பக் கூட நீரு தனியா ஒரு இங்கிலீஷ் வாத்தியார் வெச்சுப் படிச்சுக்கலாமில்லே?'' என்று ஒரு நல்ல யோசனை கூறினார்.

சிங்காரம் கண்களை மூடி அண்ணாந்தவாறு யோசித்தான்.

''சாமீ!'' என்று ஆர்வமாய் விழிகளைத் திறந்தவாறு கேட்டான். ''அதுக்கு ஏற்பாடு பண்றீங்களா? நல்ல வாத்தியாரா பார்த்து ஏற்பாடு பண்ணுங்க ... யாராவது வயசானவரா கெடைப்பாங்க ... தினம் காலையிலே இங்கே தோப்புக்கு வந்துட்டார்னு நான் என் வேலைகளையும் பார்த்துக்கிட்டுப் பாடமும் படிச்சுக்குவேன்...'' என்றான்.

''பாப்போம், அதுக்கு என்ன சிரமம்!... உனக்குக் கல்யாணம் பண்ணி வைக்கணும்னு உங்க சின்னம்மா ஆசைப்படுது. அதுக்கு முன்னாலே உம்ம தகப்பனார் எழுதி வெச்சிருக்கிற பிரகாரம் பெரியசாமி உன் சொத்துக்களை ஐயிட்டம் ஐயிட்டமா உனக்கு ஒப்படைக்கணும் ... அதெல்லாம் முடிஞ்சு ஒரு நிலைப் பட்டவுடனே உம்ம இங்கிலீசுப் பாடத்துக்கு ஏற்பாடு பண்ணிடப் போதாதோ?...'' என்றார் விளக்குச்சாமி.

''நாந்தான் எல்லாத்துக்கும் ஆகட்டும்னு சொல்லிட்டேனே!'' என்றான் சிங்காரம்.



''ம்! அதைப் பத்தியெல்லாம் ஒண்ணும் இல்லே ... உங்க அக்காமாருக உம்மப் பத்தி அபவாதமா ... அதான் இந்த வெள்ளச்சி சமாசாரமா என்னமோ கரைசல் பண்றாங்க போலிருக்கு....'' என்று இழுத்து இழுத்துச் சொன்னார் சாமியார்.

தாம் சொல்லுவது அந்த மகாராஜ மாப்பிள்ளையின் காதில் விழுந்து விடக் கூடாதே என்பதற்காகத்தான் அந்த இழுப்பு என்று புரிந்து கொண்ட சிங்காரம் சாமியார் கூறியதைக் கேட்டுக் கயிற்றுக் கட்டிலில் மல்லாந்து விழுந்து புரண்டு புரண்டு சிரித்தான்.

''யாரு சொன்னது?... யாரு பாத்ததாம்? எப்போ?... சாமி சாமி, சொல்லுங்க சொல்லுங்க... என்ன கரைசல்?'' என்று கெக்கலிப்பாய்க் கேட்டான்.

''நீரு ஒண்ணும் சிரிச்சு மழுப்ப வேணாம்! எனக்கு எல்லாம் தெரியும் — நீயும் வெள்ளச்சியும் இங்கே அடிக்கிற கூத்தெல்லாம்'' என்று பொய்யான கண்டிப்புடன் அவனை மடக்கி அடக்கினார் சாமியார்.

''இந்த பாருங்க சாமியாரே! நீங்களும் இந்தப் பொட்டச்சிங்களோட சேந்து கிட்டுப் பொய் சொல்லாதீங்க ... நான் எத்தினி நாளு வெள்ளச்சியோட இங்கே கூத்தடிச்சேன், நீங்க பாத்தீங்க! அன்னிக்கி ஒரு நாளுதான் ... அவ அந்தத் தங்கச் சங்கிலியை வேணாம்னு திருப்பிக் கொண்ணாந்து குடுத்த ஒரு நாளுதானே?... நான் இதை உனக்குக் குடுக்கலேடி, உன் பொண்ணுக்குக் குடுத்தேன்... போட்டு அவ முறைக்காரன் பொன்னம்பலத்துக்குச் சீக்கிரம் கட்டிக் குடுடின்னு சொன்னேன்.... அவ 'வேணாம் வேணாம்'னு ரொம்பத்தான் கிராக்கி பண்ணிக்கினு ஓடினான். நான் அவளைப் புடிச்சி இழுத்தாந்து அவ கழுத்திலே அதைப் போட்டு விட்டேன்... அதைத்தான் பாத்துக்கிட்டுக் காது மூக்கு வெச்சிக் கதை சொல்றாங்களாக்கும்!'' என்று அவன் விளக்கியதைக் கேட்டுச் சாமியார் கண்களைச் சிமிட்டி அவனைப் பரிகாசம் பண்ணிக் கைகளைத் தட்டினார். ''பின்னே நீரு என்னை ஏமாத்த முடியாது..!'' என்று சிரித்தார் சாமியார்.

''ஏன் சாமி! நான் ஆம்பிளை தானே? நான் இஷ்டப்பட்டா எவ கிட்டயும் போவேன் — இவங்க யாரு அதையெல்லாம் கேக்கறதுக்கு! நான் என்ன எங்க அண்ணாரு மாதிரி தாசித் தெருவே கதின்னு கெடக்கறேனா?'' என்று நியாயம் கேட்டான்.

''நீயும் அப்படி ஆயிட்டியின்னு என்ன பண்றதுன்னு கவலைப்படறாங்க, போலிருக்கு?''

''அதுக்கு என்ன பண்ணமுடியும்! ஆனா ஆனதுதான். அதையெல்லாம் பார்த்தா நம்ப சாதியிலே எந்தப் பொண்ணையும் எவனுக்கும் கட்டிக் குடுக்க முடியாது. அவனவன் யோக்யதையா இருக்கறது அவனவன் நன்மையைக் கருதித்தானே தவிர கண்டவனுங்க என்ன சொல்லுவாங்கன்னு கவலைப்படணுமா?.... ஒண்ணு சொல்றேன் சாமி. நான் கெட்டவனோ நல்லவனோ என் இஷ்டப்படிதான் இருப்பேன். அதையெல்லாம் பத்தி என்னை நாளைக்கிக் கேள்வி கேட்டுக்கிட்டிருப்பாங்கன்னா, இப்பவே சொல்லிடுங்க — உங்க பொண்ணு எனக்கு வேணாம்னு'' என்று முறுக்கிக் கொண்டான் சிங்காரம்.

சாமியாருக்கு அவன் அப்படிச் சொன்னது பெருமிதமாகத்தானிருந்தது. ''தம்பி தம்பீ.. நீரு பாட்டுக்கு ஏதாவது ஒண்ணு கெடக்க ஒண்ணு சொல்லிப்புடாதீரு... சங்கிலியை வெள்ளையம்மாக் கழுத்திலே நீரு போட்டதைப் பாத்துட்டு என்னமோ உளறுதுங்க, பொண்டுக—விட்டுத் தள்ளும்'' என்று சமாதானப்படுத்தினார் சாமியார்.

சிங்காரம் வானத்தை நோக்கித் தலையை அண்ணாந்து கண்களை மூடியபடி யோசித்தான். ''சாமி நான் வெள்ளையம்மாகிட்ட நடந்துக்கிட்டது சரியில்லேதான்... இனிமே அது மாதிரி நடக்காது .. ஆனாக்கா, சாமி .... எனக்கு வெள்ளையம்மா மேலே ரொம்ப ஆசை ரொ-ம்-ப அதுகூட தப்பா சாமி?'' என்று சிங்காரம் கண்களைத் திறந்த போது உணர்ச்சி மிகுதியால் அவனது கண்கள் சிவந்து கலங்கி ஜொலித்தன.

''தப்பாவது சரியாவது! நீரு அநாவசியமா கவலைப்படாதீர்... யார் என்ன சொன்னாலும் சந்தோஷமா இரும்'' என்று எழுந்து நின்று சிங்காரத்தின் முதுகில் தட்டிக் கொடுத்தார் விளக்குச்சாமி.

(தொடரும்)




● 'குளோஸ் அப்' பிரமாதம். படம் பிடித்துக் காட்டிய செய்திகளுடன், படத்திலே எங்குமே தலைகாட்டாத திரு எஸ். ஏ. பி. அவர்களையும் 'குளோஸ் அப்'பில் காட்டினீர்களே! அதற்கு ஒரு 'ஷொட்டு'.
சென்னை–44 மனைசை ப. ஸிரன்

● ''ஹாவ்லாக் எல்லிஸ்'' எழுதியுள்ள 'Psychology of sex' என்ற நூலைத் ''தொண்ணூறுவயது இளைஞர்''ான பெ. நா. அப்புசாமி தமிழாக்கப்போவதாக 'குளோஸ் அப்'பகுதியில் படித்தேன். ஆனால் ஹாவ்லாக் எல்லிஸின்' நூலை ஜெயகாந்தனும் மாப்பஸான் கதைகளை கே. பாலசந்தரும் தமிழாக்கினால் சுவை சொட்டும் என்பதே என் கருத்து.
சென்னை–18 ''அல்லியப்பா''

● சிவசங்கரியின் ''மனம் கவர்ந்த மலேஷியா'' முடிந்து போனது வருத்தமாக இருக்கிறது: ஆற்றொழுக்கு நடையில் எம்மையெல்லாம் மலேஷியா, சிங்கப்பூர் பிரதேசங்களில் சுற்றிக் காட்டி வந்தார். தம் பெருமைகளைச் சுட்டிக் காட்டியது போலவே சிறுமைகளையும் சொல்லிக் கொள்ளத் தவறவில்லை. இந்த நாணயத்தைத் தமிழ் எழுத்தாளரிடையே காண்பது அரிது.
புதுவை பிலோமிநாதன்

● மனம் கவர்ந்த மலேஷியா திருமதி சிவசங்கரியின் தனித்தன்மையான எழுத்தில் சிறப்படைந்தது. சினிமாக்களிலும் கதைகளிலும் கண்ட மலேஷியா, சிங்கப்பூரை நேரிடையாகப் பார்த்தது போல் மனநிறைவு எனக்கு ஏற்பட்டது.
காரைக்குறிச்சி ஏ. சுப்பிரமணியன்

● 'பாரதிக்கு அருளிய விநாயகர்' என்ற ஒரு துணுக்கில், 'பாண்டிச்சேரியிலுள்ள பிரசித்தி பெற்ற ஸ்ரீ மணக்குள விநாயகர் ஆலயத்தில் இந்துக்கள் மட்டுமின்றி கிறிஸ்துவர்கள், இஸ்லாம் மதத்தவர்களும் வந்து வழிபடுகிறார்கள்' என்ற வரிகள் என் உள்ளத்தைப் புண்படச் செய்தன.

முஸ்லீம்கள் எக்காரணத்தைக் கொண்டும் உருவ வழிபாட்டை மேற்கொள்ள மாட்டார்கள். அப்படி யாராவது மேற்கொள்வார்களேயானால், அவர்கள் இஸ்லாம் மதத்தை விட்டு வேறு மதத்தைத் தழுவியவர்களாகவே கருதப்படுவார்கள்.
சென்னை–1 நாகை. ஜி. அஹமது

● யார் போராட்டம் நடத்தினாலும் நாங்கள் இணைந்து கொள்ளத் தயாராக இருக்கிறோம் என்று கூறும் சிவ இளங்கோவே!

தாங்கள் துதிபாடும் கட்சி அரசுக் கட்டிலில் இருக்கும் போது பட்டதாரி ஆசிரியர் சங்கம் போராட்டம் நடத்தியதே! தங்களுக்கு ஞாபகம் இருக்காது என்றே எண்ணுகிறேன். அவர்களுக்கு ஆதரவு அளித்தீரோ?

ஓய்வு பெறும் வயதை 55லிருந்து 58 வரை உயர்த்தியதற்கு ஒரு போஸ்டர் கூடக் காணோமே, நன்றி தெரிவித்து? அன்றைய ஆட்சியாளர்கள் ஒரு சிறிய சாதனை செய்தாலும் வண்ண வண்ணப் போஸ்டர்கள், ஆள் உயர மாலை, மலர்க் கிரீடம். இப்போது எல்லாம் காணோமே! சங்கத்தில் பணம் இல்லையா? மனம் இல்லையா?

அப்போது அரசை எதிர்க்காதவர் இப்போது ஏன் எதிர்க்க வேண்டும்?

அப்போது அரசைக் குறை கூறாதவர் இப்போது ஏன் குறைகூற வேண்டும்?

அப்போது போராட்டம் செய்யாதவர் இப்போது ஏன் செய்ய வேண்டும்?
புவனகிரி இரா. செயபாலன்

● திரு. முத்தானந்தத்தின் பேட்டியைப் பார்த்தேன். தமிழ்நாடு நில அளவு கணிக வரைவாளர் ஒன்றிப்பின் தலைவராக இருந்தவர் மட்டும் 21.4.79–ல் அவரது பதவியை ராஜினாமா செய்து விட்டு, மாற்று முகாமிற்குச் சென்று விட்டாரே தவிர மற்ற மாநில நிர்வாகிகள், மாவட்ட நிர்வாகிகள், மாவட்ட அமைப்புக்கள் அனைத்தும் என். ஜி. ஓ. சங்கத்துடன் இணைக்கப்பட்ட தமிழ்நாடு கணிக வரைவாளர் ஒன்றிப்பில் முன்பைவிடத் தற்போது தீவிரமாகச் செயல்பட்டு வருகின்றனர் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.
சென்னை–5 உ. வே. நவநீதகிருஷ்ணன்

● 'கவரிமான்' என்ற உங்களது தலையங்கத்தில், மக்களாவது கவரிமான்களாக இருக்க வேண்டாமா-என்று ஆதங்கப்பட்டுள்ளீர்கள்! மக்களா. — கவரிமான்களா... வேடிக்கை! இந்திரா காந்தியம்மையார் அலகாபாத் கோர்ட்டு தீர்ப்பை அவமதித்தபோது கவலைப் பட்டார்களா? ஊரிலே குடிக்க நீரில்லையே — பஞ்சாயத்துகவனிக்கவில்லையே—என்ற கவலைப் படுகிறார்களா? மண்ணெண்ணெய் ஸ்டாக் இருக்கும் போதே — கிடைக்கவில்லையே — வருத்தப்படுகிறார்களா! சிமெண்ட் மூட்டை ரூ 40 விற்கிறதே — கவலையா! திருவள்ளூர் போன்ற முனிசிபாலிடி உள்ள ஊர்களிலேயே இரவில் விளக்கு எரிவதில்லையே — வருத்தமா? சென்னையில்' நடைபாதை நடக்க வழியில்லாமல் உள்ளதே — கவலையா — மூச் அவரவர் வேலையானால் போதும்! ஊராவது. நாடாவது!
பாதூர் ச. எஸ். ரங்கநாதன்

# கனவா - நிஜமா? 24

கதை: வாண்டுமாமா
சித்திரம்: செல்லம்



















மன்னர் வஜ்ரபாகு மாயாபுரி அரண்மனையின் ஒரு பகுதியில் கிடத்தப்பட்டிருக்கிறார். அரசாங்க மருத்துவரின் பராமரிப்பில்.
மருத்துவத் துறையில் நான் கற்றவையெல்லாம் பயன்படுத்தி விட்டேன். பலன் தெரியவில்லை. இனி, இறைவன் கருணைக்குக் காத்திருப்பதைத் தவிர வேறு மார்க்கமில்லை.
மன்னருக்கு நினைவு திரும்பும் வரை அவர் அருகிலேயே காத்துக் கிடக்கிறேன்.


மருத்துவரின் இடைவிடா சிகிச்சையும் இறை அருளும் வஜ்ரபாகுவின் விழிகளைத் திறக்கச் செய்கின்றன. துரோகிகள் அன்று மூர்க்கமாகத் தாக்கிய அதிர்ச்சி அவர் நினைவைப் பறித்துப் போயிருந்தது. இப்போது ஈட்டித் தாக்குதல் மறுபடி அவருக்கு நினைவை அளித்தது.
ரணமல்லா... சௌக்கியமா?
மகாராஜா! தங்களுக்கு நினைவு திரும்பி விட்டது. இனி அபாயமில்லை.


மன்னர் வஜ்ரபாகு நினைவு திரும்பிய சந்தோஷச் செய்தியை உடனே தெரிவிக்க விரும்பும் இவங்களை மார்பண்டம் போய்க் கூறுகிறார் மருத்துவர்.
ஆனாலும்... இனிமேல்தான் அவரை கவனமாகப் பார்த்துக் கொள்ள வேண்டும்.
ரணமல்லனுக்கு உதவியாக நானும் மன்னரைக் கண்காணிக்க அங்கு போகிறேன் வைத்தியரே.


மன்னரை மறுபடி மயக்கம் ஆட்கொண்டது. நள்ளிரவில் ஓர் உருவம் மன்னரின் படுக்கையறையில் நுழைந்து இருளோடே நகர்ந்து கட்டிலை நெருங்குகிறது.
யாரது...
நில்... அங்கேயே...


உருவத்திடமிருந்து பதில் வராததைக் கண்ட ரணமல்லன் உருவிய வாளுடன் அதன் மீது பாய அடுத்த விநாடி அவனுடன் அவன் கை வாளும் சுழற்றித் தூக்கி வீசப்படுகிறது.
ஆவ்... வ்...!
தொடரும்

# கன்யா, நீ யார்?

'விஜுதா'



சந்தோஷ்

**வா**னம் அந்த நடு இரவில் சுமாராக அழுது கொண்டிருந்தது. தெறித்துக் கண்ணாடியில் விழுந்த நீர்த்துளிகளை வைப்பரைப் போட்டு விரட்டினேன். சாதாரண வேகத்தில் கான்சலை நகர்த்திக் கொண்டிருந்தேன். இடப்பக்கம் ஸ்டீரிங்கை ஒடித்தேன். எதிரே பரந்து சிதறிய வெளிச்சத்தில் —

ஓர் இளம்பெண் தாறுமாறாக முன்னால் ஓடிவந்து கொண்டிருந்தாள். யார் இவள்? இந்த நேரத்தில் ஏன் இப்படி ஓடி வருகிறாள்? யாராவது துரத்துகிறார்களா? லிவரை ந்யூட்ரலுக்குத் தள்ளினேன். ஓடி வந்த வேகத்தில் அவளுக்கு மூச்சு இரைத்தது. அவள் பேச முடியாமல் தடுமாறினாள். எப்படியோ அவளுடைய விரல் நடனத்தைப் புரிந்து கொண்டு கதவைத் திறந்துவிட்டேன்.

''பின் பக்கமாகக் காரைத் திருப்பி ஓட்டுங்க, ப்ளீஸ்!'' அவள் பரபரத்தாள்.

''ஏன்?''

அவள் பதில் சொல்வதற்குள், எதிரே கண்ணாடிக்கு வெளிப்பக்கத்தில் நாலைந்து ஆர். எஸ். பக்கிரிகள் பெரிய மீசையுடன் ஓடிவந்து கொண்டிருந்தது தெரிந்தது. நான் கான்சலை வேறு திசையில் திருப்பி எழுபதில் பாயவிட்டேன்.

அவள் கொஞ்சம் பெரிதாக மூச்சுவிட்டாள். ஆசுவாசப் படுத்திக் கொண்டாள். நன்றாகச் சாய்ந்தபடி உடலெங்கும் பரவியிருந்த ஈரத்தைச் சேலைத் தலைப்பால் ஒற்றி எடுத்தாள். என் கர்சீப்பை எடுத்து அவளிடம் கொடுத்தேன். என்னைப் பார்த்தாள். அவள் பார்வையில் ஸ்பஷ்டமாக நன்றிகள் மின்னின.

''நல்ல சமயத்துக்கு நீங்கள் வந்தீர்கள். இல்லையென்றால் என் கதி என்னவாயிருக்குமோ? ரொம்ப தேங்க்ஸ்!''

மௌனமாகக் காரைச் சுற்றி வளைத்து ஓட்டினேன். இன்னும் வெளியில் மழை கஞ்சத்தனமாகத் தூறிக் கொண்டிருந்தது. சவரியிலிருந்து புறப்படும்போது வானம் நீர் தெளிக்கவில்லை. ஜேம்ஸ் கார்டன் சொன்ன நேரத்துக்கு வந்திருந்தால், இன்னும் முன்னதாகப் புறப்பட்டிருக்கலாம். ஜே. கார்டன்? ஆமாம். என் வெளிநாட்டு நண்பர். அவரால்தான் போன மாதம் சில

வட்சங்கள் கறுப்பாகக் கிடைத்தது. அந்தச் சந்தோஷத்தில்தான் அவருக்கு பார்ட்டி வைத்தேன். முடித்து விட்டுத் திரும்பும் போதுதான் எதிரே இளம்பெண்... ஒட்டம்.. டக்கிரிகள், இத்யாதி... இத்யாதிகள்.

போர்டிகோவில் காரைச் சாகடித்துவிட்டு, ''வா உள்ளே!'' என்று அவளைக் கூப்பிட்டேன். ஒரு மாதிரியாக என்னைப் பார்த்தாள். கண்கள் மிரட்சியைக் காட்டின. ''பயப்பட வேண்டாம். ஒன்றும் தவறாக நடந்துவிடாது. தைரியமாக வா!''

காரின் கதவை ஒரு பக்கமாக ஒதுக்கிவிட்டுச் சேலைத் தலைப்பை இழுத்துப் போர்த்திக் கொண்டு நிலிலுடன் இறங்கி என்னைத் தொடர்ந்தாள்.

''உட்கார்.'' சோபாவைக் காட்டினேன்.

சுற்று முற்றும் பார்த்தாள். உட்கார்ந்தாள். ''இது...'' அவள் இழுத்தாள்.

''என்னுடைய மூன்று பங்களாக்களில் இது ஒன்று! நான் ஒருவன்தான் இதில் இருக்கிறேன். இதோ வருகிறேன்'' என்று சொல்லி விட்டுச் சமையலறைக்குள் போய் டீ தயாரித்து, எடுத்து வந்து அவளிடம் நீட்டினேன். எடுத்துக் கொண்டாள்.

எதிர் சோபாவில் அமர்ந்து கொண்டு, டீயை உறிஞ்சிய படி அவளை முழுமையாக நோட்டம் விட்டேன். இளமையாக இருந்தாள். இருபதுக்கு மேல் இருபத்தொன்றுக்குள் வயதிருக்கும். நல்ல சிவப்பு. வட்ட முகத்தின் வனப்புக்குக் கட்டியம் கூறுவது போல் கூர் நாசி. உடலின் செழுமைகள் திருட்டுத்தனமாக எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தன. ரேகா கண்கள். காதில் ஸ்டட். மிர்ராபோ சேலை.

''ஆமாம், நீ எப்படி அந்த முரடர்களிடம் சிக்கிக் கொண்டாய்?''

சரிந்திருந்த தன் கூந்தலை ஒருபுறமாக ஒதுக்கி விட்டுத் தன் கதையை அவள் சுருக்கமாகச் சொன்னாள்:

**கன்யா**

''என் பெயர் கன்யா. வில்லெனுவுக்குப் பக்கத்தில், ஒதுக்கப்பட்ட ஒரு சின்னக் கிராமம்தான் எனக்குப் பூர்வீகம். அப்பாவுக்கு விவசாயம். என் ஊருக்கு 'க்ரீன் பிட்பண்டு கம்பெனி'யோட ஏஜெண்டுன்னு சொல்லிக்கிட்டு ஒரு வாலிபர் வந்தார். வாட்ட சாட்டமாக இருந்தார். தம் பெயர் 'சுந்தர்' என்றார்.

''தங்களோட சிட் கம்பெனியின் கிளையை எங்கள் ஊரில் துவக்கத்தான் அவர் வந்திருந்தார். எங்க ஊர் சின்னதுதானே? கம்பெனியைத் திறக்க நல்ல வசதியுடன் கூடிய வீடு அவருக்குக் கிடைக்கவில்லை. கடைசியில் எங்க வீட்டு மாடியை ஒதுக்கிக் கொடுத்தோம். என்னுடன் சகஜமாகச் சிரித்துப் பேசினார். அவரோட பேச்சிலும் அழகிலும் நான் மயங்கிவிட்டேன். நாளாவட்டத்தில் எனக்கு அவர்மீது நேசம் ஏற்பட்டது. அவரும் என்னை விரும்பினார்.

''ஒருநாள், ''கன்யா! நாம இரண்டுபேரும் மார்கோவாவுக்கு ஓடிப் போய் விடலாம். அங்கே போய்த் திருமணம் பண்ணிக் கொள்ளலாம். என்ன?'' என்று என்னிடம் கேட்டார்.

''ஏதோ பருவ ஆசையில், அசட்டுத் தைரியத்தில் நானும் ஒத்துக் கொண்டு அவருடன் ஓடிவந்து விட்டேன். அப்புறம்தான் தெரிந்தது அவர் ஒரு மோசக்காரர் என்று. என்னை ஒரு சேட்டிடம் விற்றுவிடப் பேரம் பேசினார். அப்புறம் நைசாகத் தப்பி வந்துவிட்டேன். வீட்டுக்குத் திரும்பி விடலாமென்று அன்றைக்கு ரயில்வே ஸ்டேஷனில் காத்திருக்கும் போது அங்கே என்னைச் சிலபேர் வட்டமிட்டார்கள். அவர்களிடமிருந்து தப்பித்து ஓடி வந்த போதுதான் உங்களைக் காரோடு சந்தித்தேன். இதுதான் என் கடந்த கால வாழ்க்கை.''

அவர் நான் சொல்வதைக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தார்.

---

கண்ணன்: கல்யாண வீட்டில் நுழைஞ்சதும் ஏதோ சீட்டு தருங்களே என்ன அது?

முரளி: பரிசுப் பொருள்களைப் பார்த்துச் சாப்பாட்டுக்குக் கார்டு தருங்க. பரிசு எதுவுமே இல்லை என்றால் 'வருகைக்கு நன்றி' என்ற கார்டு தருங்க.

லலிதா செல்லப்பா.



**சந்தோஷ்**

கீழ்ப்பக்கத்து அறைகளில் ஏதாவது ஒன்றை அவளுக்கு ஒதுக்கித் தரலாமா என்று ஆரம்பத்தில் நினைத்தேன். 'எதற்கும் பக்கத்தில் இருக்கட்டும்' என்று மாடியில் என் பக்கத்து அறையை அவளுக்குக் கொடுத்தேன்.

எனக்கென்னவோ அவள் மீது முழுப்பிடிப்பு ஏற்படவில்லை. ஒரு குழப்பம் அவள் மீது வியாபித்திருந்தது. 'லிப்ட்' கேட்கும் எத்தனை இளம்பெண்கள் 'பாக்கெட்' அடிக்கிறார்கள்? கால்கேர்ல் போல வந்து அகப்பட்டதைச் சுருட்டும் பெண்கள் இல்லையா? நான் அவளைப் பல மீட்டர்கள் சந்தேகித்தேன்.

விடிந்ததும் அவளுக்கு வேண்டிய துணிகளை வாங்கிவந்து கொடுத்தேன். குழந்தையைப் போல் மகிழ்ச்சியுடன், அணிந்து கொண்டாள். ஆனால் அவளை என்னுடன் வெளியில்

# தம்பு!




அழைத்துச் செல்லவில்லை. சமையல்காரன் பகதூரைக் காவலுக்கு வைத்துவிட்டு வெளி உலகில் நான் மட்டும் உலாவினேன். எதையோ எதிர்பார்த்துப் பங்களாவில் முழு உரிமையும் அவனுக்குக் கொடுத்திருந்தேன். எதிர்பார்த்த படி விசேஷமாக ஒன்றும் நடக்கவில்லை — இந்தநாள் வரைக்கும்!

ஆறுவது நாள்.

ஹாலில் இருந்த கடிகாரம் இரவு மணி இரண்டு என்பதை ஒலித்துக் காட்டியது. சில் வண்டுகள் சன்னலுக்கு வெளியே ரீங்கார மிட்டுக் கொண்டிருந்தன. சலீர்! கண்ணாடிகள் நொறுங்கும் சத்தம் எழுந்து கொண்டேன். சிறிது நேரம் இறந்த ஒநாயைப் போல் மூச்சை அடக்கிக் கொண்டு, மெல்ல அறைத் தாழ்ப்பாளை ஒதுக்கி விட்டு டார்ச்சுடன் வெளியே வந்தேன். கீழே இருந்துதான் சலீர் வந்தது. கன்யாவின் அடுத்த அறையை நோட்டம் விட்டேன். அவனை உள்ளே காணோம். அப்படியென்றால்...?

கீழே இறங்கி வந்தேன். கறுப்பு இருட்டில் நீந்திப் பீரோ வைத்திருக்கும் அறைக்கதவு மீது கையை வைத்தேன். தானாக வழிவிட்டது. டார்ச்சுக்கு உயிரூட்டினேன். ஒடி மலர்ந்த வட்ட வெளிச்சத்தில் —

கன்யா!

பீரோ திறந்திருந்தது: காகித ரூபாய்கள் சிதறிக் கிடந்தன. ராட்சசன் போல் அவன் மீது பாய்ந்தேன். "நான் சந்தேகப்பட்டது சரியாகப் போய் விட்டது. என் சந்தேகக் கண்களுக்கு யாருமே தப்ப முடியாது. சொல். கன்யா, உண்மையைச் சொல்! நீ யார்?"

அவன் சொன்னான்:

**கன்யா**

"என் பெயர் கன்யா. என் அப்பா சில மாதங்களுக்கு முன்புதான் காலமானார். அநாதரவான எங்கள் குடும்பத்தில் மொத்தம் ஐந்து ஜீவன்கள். அப்பாவின் வருமானத்தில் வாழ்ந்து கொண்டிருந்த எங்கள் குடும்பம். அவருக்குப் பின்னால் செய்வதறியாது திணறிய போது நான் வேலைக்காகப் பல இடங்களில் முயன்றேன். கிடைக்கவில்லை. என்னிடம் எதையோ எதிர்பார்த்து வேலை தரப் பலர் முன் வந்தார்கள். நான் மசியவில்லை. எத்தனை நாளைக்குத்தான் பட்டினி கிடக்க முடியும்? இந்த நிலையில் தான் நான் என் குடும்பத்துக்காகத் திருட ஆரம்பித்தேன். ஆரம்பத்தில் நடுக்கமாக இருந்தது. அப்புறம் பழகிப் போய் ஒரு தைரியம் வந்து விட்டது."

"என்னை உனக்கு எப்படித் தெரியும்?" சந்தோஷ் என்னைக் கேட்டார்.

"தனிக் கட்டையான உங்களை நான் வெகு நாட்களாகவே கவனித்து வந்திருக்கிறேன். என் கைவரிசையை உங்களிடம் காட்ட நினைத்தேன். அதனால்தான் அன்று திட்டமிட்டு உங்கள் காரின் முன்னால் ஓடி வந்தேன். ஒரு நாடகமாடிச் சுலபமாக உங்கள் வீட்டுக்குள் புகுந்து விட்டேன். நீங்கள் எந்த கட்டத்திலும் என்னைச் சந்தேகிக்கலாம். உங்கள் முழு நம்பிக்கையையும் பெற இங்கே வந்த சில நாட்களுக்கு நல்லவன் போல் இருந்தேன். ஏமாந்து விட்டீர்கள். இன்று இரவு காரியத்தை முடித்துவிட்டுப் பறந்து விடலாமென்று நினைத்திருந்தேன். என் துரதிருஷ்டம், நீங்கள் விழித்துக் கொண்டீர்கள்."

அவர் கேட்டார்: "அன்றைக்கு நாலைந்து முரடர்கள் உன்னைத் துரத்திக் கொண்டு வந்தார்களே?"

"உண்மைதான்! ஆனால் அவர்கள் என் ஆட்கள். துரத்தும்படி சொல்லியிருந்தேன்."

"அப்படியா?"

அவர் முகத்தில் ஒரு தெளிவு. "இவ்வளவு சாதுரியமாக நாடகமாடும் நீ எனக்குத் தேவை. உன்னை என் தொழிலுக்குப் பயன்படுத்திக் கொள்ளப் போகிறேன். கன்யா! இதோ, திருடிக் கொண்டு போவதற்காக நீ

எடுத்து வைத்திருக்கிறயே பணம், இதை விடப் பத்து மடங்கு நீ சம்பாதிக்கலாம். எப்படி? நீ மட்டும் என்னுடன் முழுமனத்தோடு ஒத்துழைக்க வேண்டும்'' என்றார்.

**சந்தோஷ்**

சாட்டர்ஜியைப் போனில் கூப்பிட்டேன். அவன் என் வலது கை. கன்யாவை வெளியே அனுப்பிவிட்டு, அவனிடம் விஷயத்தைச் சொன்னேன்.

மறுநாள்.

சொன்ன வேலையைச் செய்துவிட்டு சாட்டர்ஜி என் முன்னால் அவதரித்தான்.

''டேய் போன விஷயம் என்னவாயிற்று?''

''அலசிவிட்டேன் சார்.''

''கன்யா சொன்னதெல்லாம்...''

''முழுக்க முழுக்க உண்மை சார். அவளோட அம்மாவைப் பார்த்தேன். பேசினேன். கன்யா அவங்க மகள்தானும். கொஞ்ச நாளைக்கு முன்னால்தான் அந்த அம்மாவோட புருஷன் இறந்திட்டாராம்'' என்றான் சாட்டர்ஜி.

''அப்போ...''

''கன்யாவை நீங்க நம்பலாம்.''

''வெரிகுட் சாட்டர்ஜி'' என்றபடி சூட்கேஸை எடுத்தேன்.

''கன்யா! இதில் ஒரு லட்ச ரூபாய் தங்கம் இருக்கிறது. இதை நான் சொல்ற விலாசத்திலே கொடுத்திடணும். என்ன?'' விலாசத்தைச் சொன்னேன். அந்த ஜே. பி. சூட்கேஸைக் காரணத்தோடு தான் நான் பூட்டவில்லை. சிவ மி. மீட்டருக்குச் சந்தேகம் என் மனத்தில் விரவிக் கிடந்தது.

சாலைக்கு வந்த கன்யா, டாக்ஸி பிடித்துக் கொண்டு கிளம்பினான். சாட்டர்ஜியைப் பார்த்துச் சைகை செய்தேன். அவனைக் காரில் துரத்தினேன். டெய்ராஸ் சாலையிலிருந்த முகவரியில் சூட்கேஸைக் கொடுத்து விட்டுத்

ஸ்டண்ட் நடிகர்கள் பற்றி மற்றொரு படம் வந்திருக்கிறது. ஹூப்பர், ஸ்கை என்ற இருவரும் ''அபாயத்தைக் கண்டு சிரித்த ஹீரோ'' என்ற படத்தில் வரும் பல அபாயகரமான ஸ்டண்ட் காட்சிகளில் நடிக்கின்றனர். அதாவது ஒரு ஸ்டண்ட் படம் எடுக்கப்படுவதாகத் திரைக்கதை. அதன் கிளைமாக்ஸ் காட்சியில் ஒரு பெரிய பள்ளத்தாக்கை ராக்கெட் பொருத்தப்பட்டுள்ள ஒரு காரை ஓட்டியபடியே தாண்ட வேண்டும். ஸ்கை, இந்தக் காட்சியில் நடிக்க ஒப்புக் கொள்ளவில்லை. பின் வாங்கி விடுகிறார். ஹூப்பரோ ஆபத்தான அந்தக் காட்சியில் காயமேற்பட்டாலும், பக்குவமாக நடித்து விடுகிறார். ஸ்கையும், டைரக்டர் மற்றவர்களும் ஹூப்பரை மிகவும் புகழ்ந்து பாராட்டுகிறார்கள்.

மயிர்க்கூச்செறிய வைக்கும் இப்படத்திலுள்ள ஸ்டண்ட் காட்சிகள் அலபாமாவிலிருந்து காலிபோர்னியா வரையில் பல இடங்களில் படமாக்கப்பட்டுள்ளன. பிரதான நடிகர்கள் தவிர இதில் அறுபது ஸ்டண்ட் வீரர்கள் பங்கு கொண்டுள்ளனர். ஆபத்தான நடிப்பில் ஈடுபட்ட பலருக்கு எலும்பு முறிவு, தீப்புண் சூடு, உயிரே போகும் நிலை முதலியவை ஏற்பட்டாலும், காட்சிகள் தத்ரூபமாக அமைந்து விட்டன. ஹூப்பராக பர்ட் ரெய்னல்ட்ஸும், காதலியாக ஸாலி பீல்ட்டும் தோன்றுகின்றனர். — டி. எம். ஆர்.



திரும்ப முப்பது நிமிடத்துக்கு மேல் பிடிக்காது. சரியாக இருபத்தி ஏழாவது நிமிடம், வேலையை முடித்து விட்டுக் கன்யா புன்னகையுடன் என் எதிரே உதித்தாள்.

''நான் என்ன தொழில் செய்கிறேன் என்று புரிந்து கொண்டாயா கன்யா?''

''இன்னும் புரியாமல் இருக்குமா?''

நான் அவளை முழுதாக நம்பினேன்.

கன்யா இவ்வளவு சாதுரியமாக எடுத்த காரியத்தையெல்லாம் முடிப்பாள் என்று நான் கனவிலும் நினைக்கவில்லை. சபாஷ்! இந்த அரை மாதத்துக்குள் எவ்வளவு தேர்ந்து விட்டாள். உ. பி.-யில் எஸ்டேட் வாங்கினேன். 'கோவா மெடிகல் ஏஜென்சி'யில் பங்கு சேர்த்தேன். இதெல்லாம் அவள் வந்த பிறகுதான்.

கடியாரத்தைப் பார்த்தேன். முப்பது!

இந்த முப்பதாம் தேதிதான் துபாயிலிருந்து ஏழு கோடி ரூபாய் மதிப்புள்ள சரக்கை உசேன் அனுப்புவதாகச் சொல்லியிருந்தான். விஷயத்தைக் கன்யாவுக்கு விளக்கினேன்.

''இன்றிரவா?'' என்று கேட்டாள்.

''யெஸ். இன்றைக்கு அமாவாசை. கோல்வா பீச்சுக்குத் தெற்கே இட்டத்தட்டால் ஆற்றுக்குப் பக்கத்தில் நீ இரண்டு மணிக்குக் காத்திருக்க வேண்டும்.''

''பிறகு?'' என்றாள்.

''கடலிலிருந்து சிக்னல் செய்வார்கள். பதிலுக்கு நீயும் சிக்னல் செய். அடுத்த பத்தாவது நிமிடம் ஸ்டீமர் ஒன்று கரையோரம் வரும். இந்த அடையாளக் கார்டைக் கொடுத்தால் ஆட்கள் சரக்கைக் கொடுப்பார்கள். நீ சரக்குடன் கார்வருக்குப் போவது போல் போக்குக் காட்டிவிட்டு சினி ஹவுஸ் வழியாக இங்கே வந்துவிடு!'' என்றேன்.

அவள் மகிழ்ச்சியுடன் தலையாட்டினாள்.

வானம் பகலுக்காக வெளுப்பது தெரிந்தது. ஐந்து மணிக்கு இன்னும் ஐந்து நிமிடங்கள்தான் இருந்தன. கன்யாவை ஏனோ



கோழி முட்டையை எண்ணிக்கை அளவில் தான் விற்பனை செய்வார்கள். தஞ்சையில் மட்டும் முட்டைகளைத் தராசில் நிறுத்து விற்பனை செய்கிறார்கள். ஒரு கிலோ கோழி முட்டை பத்து ரூபாயாம். —பொன்மலை பரிமளம்.

---

இன்னும் காணோம். ஒருவேளை, போலீஸ் கண்ணில் பட்டு விட்டாளா? நான் பொறுமை இழந்தேன்.

கதவு தட்டப்படும் சத்தம் கேட்டது. ஓடிப்போய்த் திறந்தேன். கன்யா! ''சரக்கு எங்கே?'' பரபரப்புடன் கேட்டேன்.

''காரில் இருக்கிறது'', என்றாள். . . . .

தாவிப்போய்ப் பின் கதவைத் திறந்தேன்.

''தேங்ஸ்'' என்று சொல்லிக் கொண்டு கீழே இறங்கினார் டெபுடி கமிஷனர் வக்கையா. ஏழு கோடி சரக்கை இரண்டு கான்ஸ்டபிள்கள் இறக்கி வைத்தனர்.

''சந்தோஷ், உன்னைக் கைது செய்கிறேன்.''

என்னுள் ஒரு தடுமாற்றம். ஆனால் வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. ''காரணம்?''

''சட்ட விரோதமாகக் கள்ளத்தங்கம் கடத்தியிருக்கிறாய்'' என்றார்.

''நான் தங்கம் கடத்தினேனா? சாட்சி?''

''இந்தப் பெண்!'' அவர் கன்யாவைக் காண்பித்தார்.

''இவளா? யார் இவள்?'' அலட்சியமாக நடித்தேன். கன்யா சிரித்தாள்.

''மறைக்க வேண்டாம் சந்தோஷ். உன் சுயரூபம் தெரிந்து விட்டது. நீ நினைக்கிற மாதிரி கன்யா உன்னுடைய ஆள் இல்லே!'' —டெபுடி கமிஷனர்.

''பின்னே?'' நான் அம்பாக அவள் பக்கம் திரும்பினேன். ''கன்யா! உண்மையைச் சொல்! நீ யார்?''

அவள் சொன்னாள்:

**கன்யா**

''**மி**ஸ்டர் சந்தோஷ், இதுதான் என்னுடைய உண்மையான நிலையை விளக்கப் போகிற விஷயம். உங்கள் முன்னால் நிற்கிறாரே டி. சி. அவர்தான் என் அப்பா!''

''அப்பா?'' அவன் கண்கள் எழுபது எம். எம்மாக மாறியது.

''இதற்கு முன் நான் சொன்ன இரண்டு கதைகளும் உண்மையில் கதைகள்தான்.''

சந்தோஷ் நம்பத் தயாராக இல்லை. ''அன்று நீ என் வீட்டில் திருட முயன்றாயே, அது ஏன்?''

''ஓ... அதுவா? தொடரும் ஒரு நாடகத்தின் முதல் அத்தியாயம். என்மீது முழு நம்பிக்கை ஏற்பட நான் திருடுவது போல நடித்தேன். நம்பி விட்டாய்'' என்றேன்.

சந்தோஷ் முகம் வெளுத்தது. ''மபூசாவில் உன் குடும்பம் இருப்பதைப் பார்த்துவிட்டு வந்து சாட்டர்ஜி சொன்னானே?''

''பார்த்தது உண்மைதான். ஆனால் அது போலீஸ் தாற்காலிகமாக ஏற்பாடு செய்த போலிக் குடும்பம்! ஆரம்பத்திலே பிடித்திருக்கலாம் உன்னை. அப்படிச் செய்திருந்தால் உன் மற்ற அந்தரங்கங்கள் தெரியாமல் போயிருக்குமே? அதனால்தான் விட்டுப் பிடித்தோம். இதோ, உன்னைப் பற்றி அடாப்ஸி செய்யும் உன் டைரி. பேசாமல் குற்றத்தை ஒப்புக்கொள். தண்டனை குறையலாம்!''

''துரோகி!'' ஏமாந்துவிட்ட ஆத்திரம் அவனிடம் வார்த்தையாக வெளிப்பட்டது.

# யானைக்கும் அடி சறுக்கும்

'பரந்தாமன்'

ஒரு பிரபல எழுத்தாள நண்பருடன் பேசிக் கொண்டிருந்த பொழுது பத்திரிகையில் வெளிவந்த ஒரு கதையைக் குறிப்பிட்டுச் சொன்னார்: ஒரு திறமையான லேடி டாக்டர். அவர் நாள்தோறும் பல பிரசவங்களை வெற்றிகரமாகக் கவனித்து வந்தார். இருந்த பொழுதிலும், அவருக்கு ஒரு பெரிய மனக்குறை, அவருக்குச் சொந்தமாக ஒரு குழந்தை இல்லாதது. ஒருநாள் இதே சிந்தனையுடன் இருக்கும் பொழுது, மிக அவசரமான ஒரு பிரசவத்திற்கு, இவரை அழைத்து, போன் வந்தது.

பிரசவம் பார்த்துக் கொண்டிருந்த போது இவருக்கே மயக்கம் வந்து விட்டது. உதவியாளரிடம் பொறுப்பை ஒப்படைத்து விட்டு அகன்றார். பின்னால் பக்கத்து அறைக் கட்டிலில், சுய நினைவு வரப் பெற்றுபோது சுற்றி நின்ற டாக்டர்கள், ''ஒரு மகிழ்ச்சிகரமான செய்தி. இப்பொழுது நீங்கள் கருவுற்றிருக்கி



றீர்கள். நாலு மாசம் ஆகியிருக்கும். அதனால்தான் களைத்துப் போய் மயங்கி விழுந்து விட்டீர்கள்'' என்று சொன்னார்கள். லேடி டாக்டருக்கு மகிழ்ச்சி ஒரு புறம். வெட்கம் ஒரு புறம். இதுதான் கதை. கதாசிரியர் ஒரு முக்கியமான கருத்தைக் கவனிக்கத் தவறி விட்டார். கர்ப்பமாயிருப்பது பெண்தானே! அதிலும் ஒரு லேடி டாக்டர், அவருக்கு எப்படித் தான் கர்ப்பமாயிருப்பது தெரியாமல் போயிற்று; என்ற கேள்வியை வாசகர் எழுப்பும் போதுதான், கதாசிரியருக்கும் பத்திரிகையாசிரியருக்கும் நேர்ந்துவிட்ட தவறு தெரிகிறது. இவ்வளவுக்கும் அந்தக் கதையின் ஆசிரியரும் ஒரு பெண்மணி!

சமீபத்தில், உலகப் புகழ் பெற்று, பெரும் பரபரப்புடன் விற்பனையான நூல், இந்திய சுதந்திரம் அடைந்ததைப் பற்றி, மேல்நாட்டு ஆசிரியர் ஒருவர், எழுதிய, 'ஃப்ரீடம் அட் மிட் நைட்' (நள்ளிரவில் அடைந்த சுதந்திரம்) என்ற நூலாகும். 1947 ஆகஸ்டு பதினைந்தாம் தேதி இரவு பதினொரு மணியளவில் பண்டித ஜவஹர்லால் நேரு நிகழ்த்திய சிறப்புரையை இந்தியாவில் மட்டுமல்ல உலகநாடுகள் கூடப் பாராட்டியதுண்டு. ஆனால் அந்த உரையைப் பற்றி அந்த நூல் என்ன கூறுகிறது தெரியுமா? சுதந்திரம் பிறப்பதற்கு முன்பு பஞ்சாபிலும் வங்காளத்திலும் ஏற்பட்ட வகுப்புக் கலவரங்களால் வீதியெல்லாம் இரத்த ஆறு ஓடும் பயங்கரச் செய்திகள், நேருஜிக்கு வந்து கொண்டே இருக்கவே, அவர் அந்த நெருக்கடி நிலையில், நிகழ்த்த வேண்டிய சொற்பொழிவைப் பற்றிச் சிந்திக்கவே இயலாதவராய் இருந்தார் என்று சொல்கிறது. ஆனால், நேருஜி அந்தப் புகழ் பெற்ற பிரசங்கத்துக்காக, எவ்வளவு குறிப்பெடுத்தார், எவ்வளவு அடித்துத் திருத்தி எழுதியிருக்கிறார் சேர்த்திருக்கிறார் என்பதையெல்லாம் அவர் வாழ்ந்திருந்த மாளிகையில், இப்பொழுது உள்ள பொருட்காட்சியில் எவரும் காணலாம்.

நேருஜி பற்றி இந்தப் பிரெஞ்சு ஆசிரியர்கள் இப்படி தவறிழைத்தார்கள் என்றால் நேருஜியே தவறிழைத்ததும் உண்டு. இந்தியாவின் தென்கோடியிலிருக்கும் கன்னியாகுமரி பக்கமுள்ள கன்னித் தெய்வமிருக்கும் ராமேச்வரம்'' என்று 'டிஸ்கவரி ஆப் இண்டியா' என்ற தமது நூலில் எழுதியுள்ளார். 183ம் பக்கத்தில் இன்றும் இதைப் பார்க்க முடியும்.

மேக்மில்லன் கம்பெனியாருக்கு இந்தத் தவற்றைச் சுட்டிக்காட்டி ஒருவர் எழுதிய பொழுது, அவர்கள் சொன்ன பதில் ரொம்ப ரசமானது: ''இந்த உலகப் புகழ் பெற்ற நூலை லட்சக் கணக்கில் மக்கள் பல ஆண்டுகளாகப் படித்து விட்டார்கள். இப்பொழுது போய் அதைத் திருத்துவதாக இருந்தால் அந்த நூலில் உள்ள பாராட்டுக்குரிய வேறு பல விஷயங்களைப் பற்றியும், வாசகர்கள் சந்தேகிக்கக் கூடும், அதனால் அப்படியே விட்டுவிடுவதுதான் நல்லது'' என்று பொருள்பட எழுதினார்களாம்!

சினிமாவுக்கு ஒரு சம்பவத்துக்குப் பாட்டெழுதினார் தமிழ்ப் புலமையுடைய ஒரு கவிஞர். ''க, ச, ட, த, ப, ற, வல்லினமாம், ங, ஞ, ண, ந, ம, ன இடையினமாம். ய, ர, ல, வ, ழ, ள மெல்லினமாம்.'' என்று இசையமைத்துப் பாடலை ஒலிப்பதிவு செய்துவிட்டனர். காட்சியைப் படம் பிடித்தும் விட்டனர். படமாக்கப் பட்டபின், அதைப்





போட்டுப் பார்க்கும்பொழுது, பார்க்க வந்தவர்களில் ஒருவர், 'ஙஞண நமன' என்பதுதான் மெல்லினம்; 'யரல வழள' என்பதுதான் இடையினம் என்ற இலக்கணக் குறிப்பை எடுத்துச் சொன்னார். இது கிட்டத்தட்ட அங்கேயிருந்த எல்லாருக்கும் தெரிந்த ஒன்றுதான். ஆனால் கவனியாமல் நேர்ந்துவிட்ட தவற்றுக்கு வெட்கம் அடைந்தவர்களாய், சீர் செய்து அமைத்துக் கொண்டனர்.

இன்னொரு படத்தில் ஒரு பெண், தீபாவளிக்கு முன்னிரவு, தனது வீட்டு மாடியில் நின்று, தனது வாழ்வை நினைந்து இரங்குவதாக ஒரு பாட்டு. "நாளை தீபாவளி ஊரெல்லாம் ஒளிமயமாக இருக்கிறது. என் வாழ்வு மட்டும் இருள் மயமாக இருக்கிறது." என்ற பொருள் கொண்டது. அந்த மாளிகையையும் தோட்டத்தையும் அலங்கார மின் ஒளிகளையும் மட்டும் அல்ல, வானத்தில் முழு நிலவையும் காட்டி, கதாநாயகியுடன் இணைத்து அற்புதமாகப் படமாக்கியிருந்தார்கள். படம் வெளியான மூன்றும் நாள், அந்தப் பட இயக்குனர் வீட்டுக்குப் பக்கத்திலிருந்த ஒரு வயோதிக அம்மையார், வந்து "தீபாவளிப் பண்டிகையே அமாவாசை அன்றுதானே வரும்? அப்படியிருக்க அமாவாசைக்கு முன்னிரவு ஆகாசத்தில் எப்படி முழுநிலவு வந்தது?" என்று பச்சையாகக் கேட்டு விட்டார்.

இது போன்ற சம்பவம், மாமேதைகளின் வாழ்க்கையில் கூடச் சம்பவித்திருக்கிறது.

'தாமஸ் ஆல்வா எடிசனின் தேவைகளைக் கவனிக்கும் அம்மையார் வேளாவேளைக்குக் காப்பி, சாப்பாடு முதலியவைகளை எடுத்துச் சென்று, மூடப்பட்டிருக்கும் அவர் அறைக் கதவில் அமைந்திருக்கும் சிறு திட்டி வாசல் வழியாக ஓசையில்லாமல் வைத்து விட்டு வந்துவிடுவார். மேதைக்குத் தொந்தரவு தராதிருக்க இந்த ஏற்பாடு. இந்தச் சிறு வாசல் வழியே ஒரு பூனை சென்று விட்டது. உண்ட மீதியை அந்தப் பூனைக்கும் போட்டார். அது நாள் தவறாமல் வரத் தொடங்கியது. கொஞ்ச நாட்களுக்குப் பின், அந்தப் பூனை, இவரது ஆராய்ச்சி சாலையையே ஒரு சிறந்த பிரசவ இடமாகக் கருதி, அங்கேயே பிரசவித்தது. குட்டிகள் கொஞ்சம் பெரிதாகி வளர்ந்ததும், எடிசன் மிகப் பொறுப்புணர்ச்சியுடன் அந்தக் கதவின் அடியில் முன்பு அமைத்திருந்த வாசலுக்குப் பக்கத்தில் ஒரு சிறு ஓட்டையைச் செய்ய ஆரம்பித்தார். "எதற்குப் பக்கத்தில் இன்னுமொரு சிறு ஓட்டை?" என்று அந்த மாது எடிசனைப் பார்த்துக் கேட்டார். அவர் "குட்டிகள் வெளியே போய் வரவேண்டாமா? அதற்காக!" என்றார். "பெரிய பூனை நுழையும் அந்த வழியே அந்தக் குட்டிகள் போக முடியாதா?" என்று கேட்டார் அம்மாது. அப்பொழுது தான் எடிசனின் மூளைக்குப் பட்டது தான் செய்தது, எவ்வளவு பெரிய மடத்தனம் என்று. வெட்கிப் போனார்!



## கோபப் படாதவர்!

ஒருமுறை சில கொடியவர்கள் "யார் ஏகநாதரைக் கோபம் கொள்ளச் செய்கிறார்களோ அவர்களுக்கு இருநூறு ரூபாய் பரிசாகத் தரப்படும்" என்று அறிவித்தனர்.

பணத்துக்கு ஆசைப்பட்டு ஓர் இளைஞன் ஏகநாதரின் வீட்டை அடைந்தான். ஏகநாதர் ஒரு முகப்பட்ட நிலையில் பூஜை செய்து கொண்டிருந்தார். இளைஞன் கோபத்தைக் கிளற அவர் மடி மீது உட்கார்ந்து கொண்டான். அவர் மிகவும் மகிழ்ச்சியுடன் "நானும் எவ்வளவோ பேரைச் சந்தித்திருக்கிறேன். ஆனால் உன்னைப் போல் இவ்வளவு அன்புடன் யார் மடி மீது அமர்ந்து கொள்கிறார்கள்?" என்றார்.



இளைஞன் ஏமாற்றமடைந்தான். இருந்தாலும் இருநூறு ரூபாய் ஆசை அவனை விடவில்லை. உணவருந்தும்போது ஏகநாதரின் மனைவி கிரிஜாபாய் நெய்யை இலையில் இடுவதற்காகக் கீழே குனிந்தாளோ இல்லையோ உடனே டக்கென்று இளைஞன் கிரிஜாபாயின் முதுகின்மீது ஏறி அமர்ந்து கொண்டான்.

அப்போதும் ஏகநாதர் கோபப்படாமல் அமைதியாக "கிரிஜா! ஜாக்கிரதை! இளைஞன் கீழே விழுந்து விடப் போகிறான்" என்றார்.

கிரிஜா தன் கணவருக்குக் கொஞ்சமும் சளைத்தவள் அல்ல. அவள் "பயப்படாதீர்கள் எனக்கு நமது குழந்தை ஹரியை முதுகு மீது சுமந்து கொண்டு காரியங்கள் செய்து பழக்கம். இந்தக் குழந்தையைக் கீழே போட்டு விடுவேனா?" என்று கூறினாள்.

இளைஞன் மிகவும் வெட்கத்துடன் கிரிஜா பாயின் முதுகிலிருந்து குதித்து ஏகநாதரின் கால்களில் விழுந்து மன்னிப்புக் கோரினான்.

—தேனி முருகேசன்'

ஆதாரம்: "ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்".




(வைகாசி அனுஷமாகிய ஜூன் 9-ந் தேதி நடமாடும் தெய்வமான நம் காஞ்சிப் பெரியவாளின் ஜயந்தி நன்னாளாகும். அவரது பொன்னும் திருவடிகளைப் பணிந்து நமக்கும் நாட்டுக்கும் நானிலத்துக்கும் நன்னலங்களை வேண்டுகிறோம்.)

**ப**ரமாத்வாவிடம் தங்களுடைய துக்கங்களை மனசு விட்டுச் சொல்லிக் கொள்வதில் பொதுவாக ஜனங்கள் ஆறுதல் கொள்கிறார்கள். அவர் இவர்களுடைய முறையீடுகளைக் கேட்பதும், கஷ்டங்களைப் போக்குவதும் ஒரு பக்கம் இருக்கட்டும். இந்த மாதிரி, தங்கள் குறைகளை மனசிலேயே அடைத்து வைத்துக் கொள்ளாமல் வெளியிலே திறந்து விடுவதிலேயே ஜனங்களுக்கு ஒரு ரிலீஃப், ஆறுதல். நம் பிரார்த்தனை அவர் காதுக்குக் கேட்டு விட்டது என்று நிச்சயமாகத் தெரியாதபோதுகூட; எந்தக் கஷ்டம் போகவேண்டும் என்று பிரார்த்திக்கிறோமோ அது தீராத போதுகூட (இது பின்னால் நடக்க வேண்டியதல்லவா?), இப்போதே, மனசிலே குமுறிக் கொண்டிருந்த கஷ்டத்தைத் திறந்து விடுவதிலேயே ஒரு தாப சாந்தி கிடைக்கிறது. இருதயத்தை அரிக்கிற வியாதிக்கு, அதை வாய் விட்டுச் சொல்லிக் கொள்கிற காரியமே பரிகாரமாக இருக்கிறது. தாற்காலிகமாகத்தான்; ஆனால் அப்போதைக்கானாலும் ரிலீஃப் ரிலீஃப்தானே? மகா பெரியவரான நீலகண்ட தீக்ஷிதரே மீனாக்ஷியிடம் தம் குறைகளைச் சொல்லி முறையிடுகிறபோது, ''உனக்குத் தெரியாததற்கா அம்மா, நான் இப்படிப் புலம்புகிறேன்? உனக்கே தெரியும்தான். ஆனாலும் இப்படிப் பிரலாபிப்பதிலேயே, அரித்துப் பிடுங்கும் என் மனசுக்கு ஓர் ஆறுதல் ஏற்படுகிறதென்று நான் சொல்கிறேன்'' என்கிறார். இம்மாதிரித் தங்கள் மனஸில் இருக்கிற பாரத்தை இறக்கி வைப்பதற்காகத்தான் ஜனங்கள் தங்களுக்குத் தெய்வத் தன்மை புரிகிற இடங்களைத் தேடிப் போய் க்ஷேத்ரங்களுக்கும் ஆச்ரமங்களுக்கும் போய்— அங்கே இருக்கிற தெய்வ மூர்த்திகளிடமும், மகான்களிடமும் கஷ்டங்களை முறையிடுகிறார்கள்.

பரமாத்மா ஸர்வ வியாபி. அவர் இல்லாத இடம் இல்லை. எனவே பிரபஞ்சத்திலிருக்கிற ஒவ்வொரு தூசி தும்பிலும் கூடத் தெய்வத் தன்மை இருக்கத்தான் இருக்கிறது. ஆனால் சாமானிய ஜனங்களால் இதை உணர முடியவில்லை. அவர்கள் பார்வையில், அவர்கள் எண்ணத்தில், சில இடங்களில் மட்டுமே தெய்வத் தன்மை அழுத்தமாகத் தெரிவதாகத் தோன்றுகிறது.

ரா இல்லை, பகல் இல்லை என்று எப்போது பார்த்தாலும் என்னை ஜனங்கள் சுற்றிக் கொண்டு கஷ்டங்களைச் சொல்லிக் கொள்கிறார்கள் என்றால் அவர்கள் என் வாஸ்தவமான யோக்யதையைத் தெரிந்துகொண்டிருப்பதாக அர்த்தம் இல்லை. என் மூலமாகத் தெய்வத்தைச் சுலபமாகப் பிடித்து விட முடியுமென்று எண்ணுகிறார்கள். அதனால்தான் பரமாத்விடமே தங்களுடைய முறையீடு போய்ச் சேருகிறது என்று நம்பிக் கொண்டு அவர்கள் 'இங்கே வந்து தங்களுடைய துக்கங்களையெல்லாம் என்னிடம் சொல்லிக் கொள்கிறார்கள். ஆறுதல் வேண்டும், தேறுதல் வேண்டும் என்று தவித்துக் கொண்டிருக்கிறவர்களில் என்னிடம் தெய்வத்தன்மை இருப்பதாக நம்பிக் கொண்டிருப்பவர்கள் இப்படிக் கூட்டம் கூட்டமாகத் தேடிவந்து இருதயத்தைத் திறந்து காட்டுகிறார்கள். இப்படி, காற்றே இல்லாமல் மூடி மூடிப் புழுக்கமாக வைத்திருந்த ரூமில் ஜன்னலைத் திறக்கிற மாதிரி, பிறத்தியாரிடம் சொல்லிக்கொள்ள முடியாதபடி மூடி மூடி வைத்த கஷ்டங்களை, சிரமங்களை என்னிடம் திறந்து விடுவதிலேயே அவர்களுக்கு ஒரு திருப்தி; 'அப்பாடா, பாரத்தை இறக்கி வைத்தோம்;

# கிரிக்கெட் கற்கலாம்! 38

கோச்: கே. சந்திரசேகர்
படம்: ராஜ்.. தயாரிப்பு: குண்டுமணி

## விக்கெட் நடுவே ஓட்டம்-5





பந்தைத் தாக்காத பாட்ஸ்மன் மட்டை யில் மீது சாய்ந்து எங்கேயோ பராக்கு பார்த்திருத்தல் கூடாது. இதனால் பந்தை அடித்து விட்டு பாட்ஸ்மன் விரைவாக வரும் போது பந்தைத் தாக்காத பாட்ஸ்மன் ஓட முடியாமல் ரன் அவுட் ஆகிவிடுவார்!

பாட்ஸ்மன் எல்லைக் கோட்டைத் தாண்டி வெகுதூரம் ஓடி விடாதீர்கள். மைதானத்தில் இப்படி ஓடி விட்டுத் திரும்பவும் மற்றொரு ரன் எடுப்பது மிகக் கஷ்டம்.





எல்லை மீறிய ஓட்டம் உங்கள் உடலுக்கு கஷ்டத் தைக் கொடுக்கும். அடுத்த ரன்களுக்கு நீங்கள் தாமதமாகி விட நேரிடும்.

ஒவ்வொரு ஓட்டத்தின் போதும் பாட்ஸ்மன் எல்லைக் கோட்டிலுள்ளே மட்டையைப் பதிக்க வேண்டும். இல்லா விடில் உங்கள் கூடி அதனால் ஒரு ரன்னை இழக்கும்படி ஆகும். இதற்கு 'ஷார்ட் ரன்' என்று அம்பயர் சொல்வார்!





என்று ஒரு விச்ராந்தி. அவர்களுக்காக நான் ஏதாவது பண்ணுகிறேனா, பண்ண முடியுமா, அப்படிப்பட்ட யோக்யதை எனக்கு இருக் கிறதா என்பதெல்லாம் வேறு விஷயம். நான் எதுவும் பண்ணாமலே அவர்கள் இப்படி என் னிடம் வாய் விட்டுச் சொல்லிக் கொள்வதில் தாங்களாகவே பாரத்தை இறக்கி வைத்துக் கொள்கிறார்கள்.

'இம்மாதிரி ஸ்வாமிகளை ராப் பகல் போட் டுப் பிடுங்கக் கூடாது' என்று மடத்துக்காரர் களும், என்னைச் சுற்றி யிருக்கிறவர்களும் ஜனங்களைக் கோபித்துக் கொள்கிறார்கள். 'ஸ்வாமிகளுக்கும் சரீரமில்லையா? அதற்குச் சிரமமா யிருக்காதா?' என்று சொல்லி (குறை சொல்லிக் கொள்ள வருகிறவர்களை) தடுக்கிறார்கள். இது சரிதானா? எனக்குச் சரீர சிரமம் ஏற்படும் என்பதற்காக இத்தனை பேர் மனஸிலே இருக்கிற சிரமத்தை, கொதித் துக் கொண்டிருக்கிற தவிப்பை அவர்கள் சொல்லிக் கொண்டு தாப சமனம் அடை வதைத் தடுப்பது நியாயமாகுமா? நான் எதற்காக இருக்கிறேன்? ஜனங்களுடைய கஷ்டங்களைக் கேட்டு ஆறுதல் சொல்வதற் காகத்தான் இந்த வாழ்க்கை ஏற்பட்டிருக் கிறது. ராவும் பகலும் ஜனங்கள் படுகிற துக்க பாரத்தை லேசாக்குவதற்குத்தான் இந்த சரீரம் ஏற்பட்டிருக்கிறது. 'நான் லேசாக்குகிறேன்' என்றால் அதற்காக ஏதோ பண்ணுகிறேன், பண்ணுகிற சக்தி எனக்கு இருக்கிறது என்றில்லை. அவர்கள் தாங்களே தங்களை லேசாக்கிக் கொள்வதற்கு ஒரு கார ணமாக என்னை வைத்திருக்கிறது என்றுதான் சொல்கிறேன். காரியத்தில் நான் பரிகாரம் பண்ணினாலும் பண்ணா விட்டாலும் வாய் வார்த்தையாக ஆறுதல் சொல்லி விட்டாலே கஷ்டப்படுகிறவர்களுக்கு ரொம்பவும் நிம்மதி யாகிவிடுகிறது. ஜனங்களுக்காக இந்த உப காரம்கூட நான் பண்ணாமலிருந்தால் நியாய மாகுமா? இதைப் பண்ணவே எடுத்த சரீரம், கஷ்டப்படும் ஜனங்களைத் தினம் தினம் மணிக் கணக்கில் பார்த்து ஆறுதல் சொல்வதில் பலஹீனமானால்கூடப் பாதகமில்லை. இதனால் சரீரத்துக்கு என்ன ஹானி ஏற்பட்டாலும் சரி, இதுதான் என் உள்ளத்துக்குப் பலம்! துக்கப்படுகிறவர்களுக்கு, நம்பி வருகிறவர் களுக்கு ஆறுதலாக இருப்பதை விட ஜன்மா எடுத்ததற்கு வேறு பயன் இல்லை.

என்னைத் தெய்வமாகக் கொண்டாடு கிறார்கள் என்பதில் பூரிப்புக் கொள்ள ஒன்று மில்லை. ஆனால், 'என்னிடம் தெய்வ சக்தி இருக்கிறது என்று நினைத்துத்தானே கொண் டாடுகிறார்கள்?' என்று நினைக்கிறபோது, 'இத்தனை ஜனங்கள் தங்கள் கஷ்டத்தைக் கேட்டு நிவர்த்தி செய்கிற கருணாமூர்த்தி யான பரமாத்மா ஒருத்தன் இருக்கிறான் என்று எவ்வளவு நம்பிக்கை வைத்திருக் கிறார்கள்' என்று நினைத்து அதில் ஆனந்த மும் மன நிறைவும் அடைகிறேன். என் னிடம் தெய்விகம் இருக்கிறதோ, இல்லையோ, என்னை நிமித்தமாகக் கொண்டு வெளியாகிற ஜனங்களுடைய தெய்வ நம்பிக்கை என்னையே பரவசப்படுத்துகிறது.

# தியாக வல்லபன்

## விக்கிரமன்

திருக்கோவலூர் மலையமான் பெரிதாகச் சிரித்தார். "நல்ல கேள்வி கேட்டாய் அல்லி! பெரியவர்கள் ஆனபிறகு யாராவது ஒருவன் தான் நாட்டை ஆளமுடியும். அதனால்தான் குழந்தைகளை வளர்க்கும் பொறுப்பை நான் ஏற்றுக் கொள்ளப் போகிறேன். நீ ஓர் உதவி செய்ய வேண்டும். திருக்கோவலூர் அரண்மனை வரை குழந்தைகளைக் காப்பாற்றி அழைத்து வர வேண்டும்" என்றார்.

அல்லி திடுக்கிட்டாள். "திருக்கோவலூருக்கா? நம்பி அவர்கள் அப்படிச் சொல்லவில்லையே. அவருடைய உத்தரவு இல்லாமல் மாட்டேன்" என்றாள்.

மலையமான் ஒருகணம் திகைத்தார். படிக்கட்டுகளில் நின்றவாறு, "என்ன சொன்னாய் பெண்ணே! என்னிடம் ஒப்படைக்க மாட்டாயா?" என்றார்.

"ஆம்" என்று அழுத்தந் திருத்தமாகக் கூறினாள் அல்லி.

"பெருமான் நம்பி சொன்னால் கேட்பாயா?"

"அவரது கட்டளையை மீற முடியுமா?"

"நான் குழந்தைகளின் பாட்டனல்லவா? நான் குழந்தைகளை அழைத்துச் செல்வதில் உனக்கென்ன ஆட்சேபம்?"

"எனக்கு அரச குடும்ப விவகாரங்கள் தெரியாது, புரியாது. குழந்தைகளைப் பாதுகாத்து ஒப்படைக்க வேண்டுமென்று படைத் தலைவர் உத்தரவிட்டார். அதன் படித்தான் நடப்பேன்."

மலையமான் மீண்டும் நகைத்தார். "அல்லி இன்னும் சிறிது நேரத்தில் சுரங்கப்பாதை வெளியே நீ பெருமான் நம்பியைச் சந்திக்கப் போகிறாய். அவரே உன்னிடம் சொல்லுவார்" என்றார்.

சுரங்கப்பாதை கோட்டைக்கு வெளியே வந்து முடிந்தது. உஷ்ணக் காற்று நீங்க வெளி உலகக் குளிர்காற்று புத்துணர்ச்சியை அளித்தது. அழுது கொண்டிருந்த குழந்தைகளும் அழுகையை நிறுத்தின.

மலையமான் கூறியது போல் பெருமான் நம்பிப் பல்லவரையர் வீரர்களுடன் அங்கே நின்று கொண்டிருந்தார்.

அவர் தமது வலதுகை நான்கு விரல்களையும் மடித்துக் கொண்டு கட்டை விரலை மட்டும் உயர்த்திக் காட்டினார்.

மலையமானும், "பெயரர்களைப் பத்திரமாகக் கொண்டுவந்துவிட்டேன்" என்று அவருக்கு மறுமொழி கூறுவது போல் கூறினார்.

"சோழ குலத்து அரசரை என்று சொல்லுங்கள்" என்று அவரைத் திருத்தினார் பல்லவரையர். "ஆகா, அப்படியே செய்கிறேன். சோழ சக்கரவர்த்தியைப் பத்திரமாக அழைத்து வந்து விட்டேன்" என்று கூறிய மலையமான் அல்லியைப் பார்த்தவாறு "நம்பி! நீங்கள் தேர்ந்தெடுத்த பெண் அல்லி மிகக் கெட்டிக்காரியாக இருக்கிறாள். குழந்தைகளைத் தங்கள் அனுமதியில்லாமல் என்னிடம் ஒப்படைக்க மாட்டாளாம்" என்றார்.

"அவள் சொல்வது நியாயம்தானே. அவளிடம்தான் குழந்தைகளைப் பாதுகாக்கும் பொறுப்பை ஒப்படைத்தேன்" என்றார் பெருமான் நம்பி.

"அல்லி என்ன படைவீரர்களைத் தனக்குத் துணையாக வைத்துக் கொண்டிருக்கிறாளா குழந்தைகளைப் பாதுகாக்க?" என்று கேட்டார் மலையமான்.

"படை வீரர்களை விட மிகப்பெரிய ஆயுதம் அவளிடம் இருக்கிறது" என்று குறும்புச் சிரிப்புடன் கூறினார் நம்பி.

அல்லி புரிந்து கொண்டாள். தலையைக் குனிந்து கொண்டாள். மலையமான் புரிந்து கொள்ளவில்லை. நம்பி, அவர் காதருகே மெல்லக் கூறினார்.

"அதற்கென்ன, அல்லியையும் திருக்கோவலூருக்கு அழைத்துச் செல்கிறேன். அங்கே தங்கியிருந்து குழந்தைகளைப் பாலூட்டி வளர்க்கட்டும்" என்றார் மலையமான்.

"மலையமான் அவர்களே! குழந்தைகளிருவரையும் தர்கவர்களிடம் ஒப்படைக்கும் பொறுப்பை என்னிடம் அளியுங்கள். குழந்தைகளைத் திறமையுடன் வளர்க்கும் பொறுப்பை நானும் ஏற்க வேண்டாம். நீங்களும் ஏற்க வேண்டாம். விரோதிகள் நெருங்காத இடத்தில் அவர்களைக் கொண்டு சேர்ப்போம்" என்றார் பெருமான் நம்பி.

"என்ன சொல்கிறீர்கள், எனக்குப் புரியவில்லையே?" என்று கேட்டார் மலையமான்.

"முதலில் நாம் கங்காபுரியை விட்டுக் குழந்தைகளைக் கொண்டு சென்று விடுவோம்" என்றார் நம்பி.



அம்மா: ராமு: உனக்கு தம்பி வேணுமா, தங்கை வேணுமா?
ராமு: இரண்டும் வேண்டாம். ஒரு நாய்க்குட்டி வேணும்.

[illegible]
[illegible] எஸ். ராமு.

''பழையாறைக்குச் செல்வதைவிடத் திருக்கோவலூருக்கு எனது அரண்மனைக்குக் குழந்தைகளை அழைத்துச் செல்வது நியாயமாகத் தோன்றவில்லையோ தங்களுக்கு? மன்னர் சில ஆண்டுகளுக்குக் குழந்தைகளைப் பார்க்கவே கூடாது என்று ராஜகுரு சொல்லியிருக்கின்றாரே மறந்து விட்டீர்களா?'' மலையமான் கேட்டார்.

''ஆம், அதனால்தான் பழையாறைக்குக் குழந்தைகளை அழைத்துச் செல்லப் போவதில்லை. பெரிய பிராட்டியும், மற்ற அரச குலப் பெண்டுகள் மாத்திரம் ஆயிரத்தளி மாளிகைக்கு அழைத்துச் செல்லப்படுகின்றார்கள்...'' என்று கூறி நம்பி நிறுத்தினார்.

''பிறகு, குழந்தைகள்?'' — மலையமான் ஆவலுடன் கேட்டார்.

''கேசவ சுவாமியும், அரச அவைக் கவிஞர் கூத்தர்பிரானும் இராசராசபுரம் மாளிகையில் நமக்காகக் காத்திருக்கின்றார்கள். அவர்களிடம் குழந்தைகளை அழைத்துச் செல்வோம். யார் எந்தக் குழந்தையை வளர்க்கும் பொறுப்பை ஏற்கின்றார்களோ அவரிடம் ஒப்படைத்து விடுவோம்'' என்றார் நம்பி.

மலையமான் சிறிது யோசித்தார். பிறகு ''நல்ல திட்டம் தான். கேசவசுவாமி வடமொழியிலும், தர்க்க சாஸ்திரங்களிலும் ஜோதிடக்கலையிலும் வல்லவர். ராஜரீக முறைகளைத் திறம்படக் கற்றுக் கொடுப்பவர். பெரிய குழந்தையை அவரிடம் ஒப்படைப்போம். ஒட்டக் கூத்தர் மகா மேதை. மூன்று தலைமுறையாக அவர் அரச அவைக் கவிஞராக இருந்து மாபெரும் காப்பியங்களைப் படைத்தவர். முதிர்ந்த அறிவும், ஆற்றலும் மிக்கவர். ஒரு குழந்தையை அவர் ஒளிமிக்க மாமேதையாக ஆக்கட்டும்'' என்றார்.

''யார் எந்தக் குழந்தையை ஏற்றுக் கொள்வர் என்பதை நாம் முடிவு செய்ய வேண்டாம். கேசவசுவாமியும், கூத்தர் பிரானும் முடிவு செய்யட்டும்'' என்றார் பெருமான் நம்பி. அப்போது அல்லியிடமிருந்து விம்மும் ஒலி கேட்டது.

''அப்படியென்றால் நான் குழந்தைகளைப் பிரிந்து பழையாறைக்குச் சென்றுவிட வேண்டியதுதானா? பழையபடி பூந்தோட்டத்தில் மாலைகளைக் கட்டியவாறு சோகத்தில் மூழ்க வேண்டியதுதானா? என் கணவரைப் பிரிந்தேன். இந்தப் பச்சிளம் குழந்தை முகத்தைப் பார்த்தாவது வாழ்வில் அமைதியைத் தேடிக் கொள்ளலாம் என்று கனவு கண்டேன். என்னிடமிருந்து குழந்தைகளைப் பிரிக்காதீர்கள். நீங்கள் பிரித்தாலும் இந்தத் தெய்வத்தை நான் பிரிய மாட்டேன்'' என்று கூறிய அல்லி கண்ணீர் விட்டுக் கதற ஆரம்பித்தாள்.



''அல்லி வருந்தாதே! உன்னிடமிருந்து குழந்தையைப் பிரிக்கும் யோசனை எனக்கில்லை. பாலூட்டிப் பராமரிக்க வேண்டும் என்பதற்காகத்தானே உன்னைக் கங்காபுரிக்கு அனுப்பினேன். பால் மறக்கா சிறிய சிசுவை யார் வளர்க்க ஏற்றுக் கொள்கிறார்களோ அவரோடு அங்கேயே நீ இருக்கலாம்'' என்றார் நம்பி.

இரு குழந்தைகளுள், சின்னஞ்சிறு பாலனை ஏற்றுக் கொள்ளப் போவது கேசவசுவாமியா அல்லது கூத்தர்பிரானா என்ற ஆவல் அல்லிக்கு மட்டுமென்ன மலையமானுக்கும் பெருமான் நம்பிப் பல்லவரையருக்கும் ஏற்பட்டது.

## அத்தியாயம் 13

## இளவரசனுக்கு ஓர் இளவரசி!

சோழச் சக்கரவர்த்தி ராஜராஜசோழ தேவரைச் சந்திக்கப் போகும் முன்பு, தன்னிடம் உறுதிமொழியைத் தர வேண்டும் என்று சோழ நாட்டு முதல் அமைச்சரும் மாதண்ட நாயகருமான திருச்சிற்றம்பல முடையார் பெருமான் நம்பிப் பல்லவரையர் வல்லபனிடம் எதிர்பார்த்தார். தன்னை வேங்கியினின்று வரவழைத்த தாயும் தனது விழியாலேயே தன் சம்மதத்தை எதிர்பார்க்கிறாள்.

இப்போது சின்னஞ்சிறு குழந்தைகளாக இருக்கும் மன்னர் பிரானின் புதல்வர்களுள் ஒருவரிடம் இளவரசுப் பதவியைத் தான் பிறகு ஒப்படைக்க வேண்டுமாம்.

வல்லபன் மெல்லத் தனக்குத் தானே சிரித்துக் கொண்டான்.

''இளவரசரே! தங்களுக்குள்ளேயே மெல்லச் சிரித்துக் கொள்ளும் காரணத்தை நான் அறியலாமா?'' என்று நம்பி கேட்டார். செல்வியும் மகனுடைய முகத்தையே கூர்ந்து நோக்கியவாறிருந்தாள்.

''வேங்கியிலிருந்தால் நான் ஏழைச் சாளுக்கிய நாட்டு மன்னர். சோழ நாட்டிலோ இளவரசர்! அதுவும் நிரந்தரமற்ற பதவி. விட்டுக் கொடுக்க வேண்டிய பதவி. நாளைக்குச் சாதாரணப் பிரஜையாக சோழ நாட்டிலும் இருக்க முடியாமல் வேங்கியிலும் வாழ முடியாத நிலை ஏற்படுமே என்பதை நினைக்கும் போது சிரிப்பு வந்தது!'' என்றான் வல்லபன். பிறகு உடனே தொடர்ந்து, ''பெருமான் நம்பி அவர்களே, என்னை இளவரசர் என்று அழைக்கிறீர்களே அந்தப் பதவியைத் தர முடிவு செய்து விட்டீர்களா?'' என்று கேட்டான்.



''இளவரசரே! கீழைச் சாளுக்கிய நாட்டு அரசர் பதவியை விடச் சோழ நாட்டு இளவரசர் பதவி உயர்ந்தது என்பது தங்களுக்குத் தெரியாததா?'' என்று நம்பி கேட்டார்.

''எந்த விதத்தில் என்று அறியலாமா?'' வல்லபன் கேட்டான்.

''கீழைச் சாளுக்கிய நாடு, சோழ மன்னர்கள் அளித்த பிச்சை என்பதும், இன்றளவும் சோழநாட்டுக்குத் திறைப்பணம் செலுத்தி வரும் சிற்றரசர்கள் தாம் அவர்கள் என்பதும் தங்களுக்குத் தெரியாதா?'' என்று நம்பி கூறியதும் வல்லபன் திகைத்தான். என்றாலும், தாயை நோக்கி, ''அம்மா, தங்களுடைய இலட்சியமெல்லாம் என்னை வேங்கி சிங்காதனத்தில் அமர வைத்துப் பார்ப்பது ஒன்று தானே? சோழ இளவரசர் பதவி குறித்துத் தாங்கள் ஆசை கொண்டது ஏன்?'' என்றான்.

''மகனே, வேங்கியில் நீ அரசனாக அமர வேண்டும் என்று எண்ணியது உண்மைதான். அது உன்னுடைய உரிமை இடம். ஆனால், சோழ நாட்டு இளவரசர் பதவியை எனது சகோதரர் உனக்கு விரும்பி அளிக்கிறார். இளவரசர் பதவிக்கு ஏற்றவன் நீதான் என்று உறுதியாக அவர் முடிவு செய்தபடியால் நான் உன்னை வரவழைத்தேன்'' என்றாள் செல்வி.

''சக்கரவர்த்திகளின் எண்ணம் நியாயமானதாயிருக்கலாம். ஆனால் நிபந்தனை விதிப்பதைத்தான் என்னால் ஏற்க முடியவில்லை.''

''இளவரசரே! நிபந்தனையை இப்போதே விதிக்காவிடில் பிறகு பல தொல்லைகள் ஏற்படக் கூடும். சோழ நாட்டின் பட்டத்துக்கு எந்தவிதப் போட்டியும் பூசலும் வருங்காலத்தில் இருக்கக் கூடாது என்பதை எண்ணியே முன் எச்சரிக்கையாக நானும், மற்ற பெரியவர்களும் முடிவு செய்தோம்'' என்ற நம்பி மேலும் தொடர்ந்தார்:

''சக்கரவர்த்திகளுக்குத் தன் வாழ்நாளைப் பற்றிய ஏதோ ஓர் ஐயப்பாடு மனத்தில் குடி கொண்டிருக்கிறது. தன் வாழ்நாளின் இறுதி நெருங்குவதாக அவருக்குத் தோன்றுகிறது. சோழ நாட்டின் வருங்காலம் திட்டத் தெளிவாக இப்போதே முடிவாக வேண்டும் என்றும், தாம் அந்திம காலத்தை அமைதியாகக் கழிக்க வேண்டும் என்றும் அவர் எதிர்பார்க்கிறார்'' என்று நம்பி கூறும்போது அவர் உணர்ச்சி வயப்பட்டவராகத் தோன்றினார்.

சிறிது நிறுத்திப் பிறகு தொடர்ந்து, ''இளவரசரே, சோழநாடு இன்று எந்தவிதப் பூசலுமின்றி அமைதியாக இருக்கிறது. ஆனால் நாளைக்கே பெரும் இடர்கள் ஏற்படலாம். பாண்டியர்கள் இப்போதே படைகளைத் திரட்டுவதாகக் கேள்வி. ஈழத்து அரசர்கள், சோழ நாட்டின் மீது படை எடுத்துக் கைப்பற்றப் பெரும் சதித்திட்டம் வகுப்பதாக நமது ஒற்றர்கள் தெரிவித்துள்ளார்கள். இவற்றையெல்லாம் எதிர்பார்க்கும்போது சோழ நாட்டில் திறமையுடன் பலமும், ஆற்றலும் மிகுந்த தலைமை இருக்க வேண்டும். சக்கரவர்த்திகள் இவற்றையெல்லாம் முன்பே திட்டமிட்டுச் செய்ய விரும்புகிறார். சின்னஞ்சிறு குழந்தைகள்தாம் சோழ நாட்டு வாரிசு, எளிதில் வென்று விடலாம் என்று எதிரிகள் மனப்பால் குடிக்கக் கூடாது. அதனால் தான்...'' என்று நம்பி கூறி முடிப்பதற்குள், வல்லபன் குறுக்கிட்டான்:

''பெருமான் நம்பி அவர்களே, தங்களைவிட அறிவும் ஆற்றலும் பலமும் நிறைந்தவர்கள் இருக்கும்போது சோழ நாட்டிற்கு என்ன பயம்? குழந்தைகள் வளர்ந்து பெரியவர்கள் ஆகும் வரையில் தாங்களே ஆட்சியை நடத்தலாமே?'' என்று கூறினான்.

செல்வியும், நம்பியும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். நம்பி புன்முறுவல் பூத்தார்.

''முதல் அமைச்சரே சோழ நாட்டை ஆண்டதாக இதுவரையில் சரித்திரமில்லை'' என்று விடை பகர்ந்த நம்பி சற்றுக் குரலை உயர்த்தி, ''இளவரசரே, சோழ நாட்டு இளவரசர் பதவியை விட, வேங்கியின் சிற்றரசர் பதவிதான் தங்களுக்குப் பிடித்தமானதா? சொல்லுங்கள்?'' என்று கேட்டார்.

வல்லபன் சிறிது யோசித்தான். ''என் திறமையை நம்பி எனக்குச் சோழ இளவரசர் பதவியைச் சக்கரவர்த்திகள் அளிக்கிறார்கள் என்றால் அது என் முன்னோர்கள் செய்த

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

## வயிற்றை நிரப்பினார்

நாத்திகன் உணவைத் தயாரித்துக் கொண்டு பாலைவனத்துக்குப் போனான். ஓரிடத்தில் அமர்ந்து கொண்டு ''என் முன் உள்ள உணவை நானே என் கையால் எடுத்து உண்ணா விட்டால் கடவுள் எப்படி என் வயிற்றை நிரப்புகிறார் என்று பார்ப்போம்'' என்று எண்ணி மௌனமாக அவன் அதன் முன் அமர்ந்தான்.

அந்த வழியே இருவர் பசியுடன் வழி தவறி வந்தனர். நாத்திகன் முன் இருந்த உணவைக் கண்டதும், அவர்களில் ஒருவன் மகிழ்ச்சியுடன் அதை எடுத்து உண்ணப் போனான். ஆனால் கூடவே சந்தேகம் எழுந்தது. 'இவன் ஏன் உணவை வைத்துக் கொண்டு உண்ணாமல் இருக்கிறான்? அதில் விஷம் கலந்து வைத்து இருப்பானோ?' அவனிடம் பேச்சுக் கொடுத்துப் பார்த்தான். நாத்திகன் பதில் கூறவில்லை. வழிப்போக்கர்களுக்குச் சந்தேகம் வலுத்தது. கோபத்துடன் இருவரும் அவனைப் பிடித்துக் கொண்டு வலுக்கட்டாயமாக அவனது வாயில் உணவைத் திணித்து அவனை விழுங்குமாறு செய்தார்கள்.

நாத்திகன் இறைவன் செயலை நினைத்து அன்று முதல் ஆத்திகன் ஆனான்.

—புராணச் சொற்பொழிவில் ஸ்ரீவத்ஸ ஜெயராம சர்மா கூறியது.

கேட்டவர்: ''சங்கரி புத்திரன்.''



# இப்போது போர்ன்விடா ஒரு ஒலிம்பிக் பானம்






உங்களுக்குப் பிடித்த போர்ன்விடா, 1980 மாஸ்கோ ஒலிம்பிக்ஸின் நிறுவனக் குழுவினரிடமிருந்து இந்தியாவின் போஷாக்கு-உணவுப் பானமாகப் பாராட்டு முத்திரையை வென்றிருக்கிறது.

போர்ன்விடா, 1980 இந்திய ஒலிம்பிக் குழுவினருக்கு "அதிகாரபூர்வமாக வழங்கப்படுவதற்கான" தனிச் சிறப்பையும் பெற்றிருக்கிறது.

ஏன் போர்ன்விடா?

ஏனெனில் போர்ன்விடா கோகோ, மால்ட், பால் மற்றும் சர்க்கரையின் போஷாக்குச் சத்துக்கள் அனைத்தையும் கொண்டுள்ளது. ஒரு கப் சூடான பாலிலே இரண்டு ஸ்பூன் போர்ன்விடா போடுங்கள். கிடைப்பது சுவைமிக்க போஷாக்கு தரும் பானம்.

உங்கள் குழந்தைகளுக்கு தினமும் இரண்டு வேளை போர்ன்விடா கொடுங்கள். அவர்கள் நாள்தோறும் ஆரோக்கியமாகவும் உற்சாகத்துடனும் விளங்கத் தேவையான போஷாக்கை அளிக்க, அவர்களுடன் ஈடு கொடுக்க உங்களுக்கும் போர்ன்விடா தேவை!




காட்பரிஸ்

**போர்ன்விடா**

ஊக்கம் ததும்பும் [illegible] வாழ்வுக்கு

OBM/2927/TAM



செந்திலாதிபனைத் தரிசித்து விட்டு வெளி வரும்போது எனக்குத் துதிக்கையை உயர்த்தி முகமன் கூறிய யானையின் கம்பீரத்தை எண்ணி வியந்தேன்.

பின்னர் ஊருக்கு வந்து அதைப் புதிய தமிழ் வடிவத்தில் எழுதிப் பார்த்தேன். யானை என்ற அந்த மாபெரும் பிறவி பொலிவிழந்து நின்றது!

— மீனாட்சி கிருஷ்ணா



புண்ணியம். என் தாய் என்ன கட்டளையிடுகிறாரோ, என்ன விரும்புகிறாரோ அதுவே என் விருப்பம்'' என்றான்.

இதுவரையில் தன்மகன் என்ன சொல்லப் போகிறானோ என்ற கவலையில் வாடிய செல்வியின் முகத்தில் புதிய ஒளி மிளிர்ந்தது. ''மகனே!'' என்று ஆவலுடன் அழைத்து, அவனை அணைத்து ஆறத்தழுவி உச்சி முகர்ந்து முத்தமிட்டு ஆசி கூறினாள்.

பெருமான் நம்பிப் பல்லவரையர் எழுந்து நின்றார். ''இளவரசரைப் பெற்றெடுத்த புண்ணியவதியே! சோழ நாடு புண்ணியம் செய்து விட்டது. இளவரசர்க்கான மண்டைகவிழ்க்கும் சடங்குகளைச் செய்ய நல்ல நாளை உடனே பார்க்க வேண்டும். அந்தநாள் மகத்தான சோழவள நாட்டின் வரலாற்றிலே திருப்பு முனையான நாள். நான் இப்போதே தங்கள் மகனைச் சக்கரவர்த்திகளிடம் அழைத்துச் செல்கிறேன். நான் கேட்ட உறுதியை இன்னும் தாங்கள் இருவரும் ஏற்றதாகக் கூறவில்லையே'' என்றார்.

''தாங்கள் விரும்பிய வண்ணம் உறுதியை அளிக்கிறேன்'' என்றான் வல்லபன்.

''என்னிடமோ, சக்கரவர்த்திகளிடமோ உறுதியளிப்பதை விட, வருங்கால சோழ அரசரிடமே உறுதி மொழியை அளித்தால் போதும்'' என்றார் நம்பி.

''சோழ நாட்டின் இளவரசராகவும், பிறகு சக்கரவர்த்தியாகவும் திகழப்போகும் அந்தக் குழந்தைகள் இப்போது எங்கே இருக்கிறார்கள்? அந்தப் புண்ணிய பூபதிகளை நான் காண வேண்டாமா?'' என்றான் வல்லபன்.

''என் அருமைச் சகோதரரின் செல்வங்களை நானும் இன்றளவும் பார்க்கவில்லை. ஆயிரத்தளி மாளிகைக்குக் கங்காபுரியிலிருந்து அந்தப்புர மகளிர் எல்லோரும் வந்து விட்டார்கள் என்று கேள்விப்பட்டேன். குழந்தைகளும் அங்கேதான் இருக்கிறார்களா?'' என்று செல்வி கேட்டாள்.

''கங்காபுரியில் நேர இருந்த பெரும் ஆபத்திலிருந்து தப்பிய அந்தப்புரப் பெண்டிர்கள், பெரியபிராட்டி அனைவரும் இராச ராசபுர மாளிகையில் இருக்கிறார்கள். ஆனால், அரசகுமாரர்கள் அங்கில்லை'' என்றார் நம்பி.

''அவர்கள் எங்கே?'' என்று செல்வியும், வல்லபனும் ஒரே குரலில் கேட்டார்கள்.

''குழந்தைகளைக் கொன்றுவிடச் சதித்திட்டம் தீட்டியவர்களின் சதியை முறியடித்துக் குழந்தைகளைக் கொண்டு வந்து தக்க இடத்தில் சேர்த்து விட்டோம்...'' என்றார் நம்பி.

''நான் உடனே குழந்தைகளைப் பார்க்க வேண்டும்'' என்று பரபரப்பும் ஆவலும் மிகக் கேட்டான் வல்லபன்.

''இளவரசே! தாங்கள் குழந்தைகளை உடனே பார்க்கத்தான் போகிறீர்கள். குழந்தையின் எதிரே வாள்மீது ஆணையிட்டுத் தாங்கள் உறுதி எடுத்துக் கொள்ளப் போகிறீர்கள். முதலில் நாம் சக்கரவர்த்தியின் சமூகத்தைக் காணச் செல்கிறோம். பிறகு அங்கிருந்து குழந்தைகளைக் காணப் பயணமாகிறோம்'' என்றார் நம்பி.

''பயணமாகிறோமா? அப்படியென்றால் குழந்தைகள் பழையாறையிலோ, இராசராசபுரத்திலோ இல்லையா?'' என்று வல்லபன் கேட்டான்.

நம்பி தலையை அசைத்தார். ''இளவரசரே! தங்களுடைய பட்டாபிஷேகம் முடியும் வரை குழந்தைகள் இருக்குமிடத்தை மிக இரகசியமாக வைத்திருக்க வேண்டியிருக்கிறது. பிறகு...'' என்று கூறிய நம்பியை நோக்கி வல்லபன், ''பிறகு?...'' என்று கேட்டான்.

''பிறகு குழந்தைகளைப் பாதுகாக்க வேண்டியது இளவரசரின் பொறுப்பு'' என்று கூறிச் சிரித்தார்.

''ஆகா, சோழநாட்டு வாரிசுகளைக் கண்ணும் கருத்துமாகப் பாதுகாப்பது என்னுடைய பொறுப்பு பல்லவரையரே! கண்ணை இமை காப்பது போல் நான் காப்பாற்றுவேன்'' என்றான் வல்லபன்.

திருச்சிற்றம்பலமுடைய பெருமான் நம்பி பல்லவரையர் வல்லபனை நோக்கி, ''இளவரசரே! முதலில் தாயை வணங்கி ஆசி பெற்று அரசரைக் காணப் புறப்படுவோம்'' என்றார்.

வல்லபன், செல்வியை வணங்கியபோது நம்பி செல்வியை நோக்கிக் கூறினார்: ''நெறியுடைப் பெம்மாள் என்ற புகழ் பெயர் பெற்ற தாங்கள் சொன்ன சொல்லைக் காப்பாற்றுவீர்கள் என்ற நம்பிக்கையில் தங்கள் மகனை — எதிரிலிப் பெருமாளை — சக்கரவர்த்திகளிடம் அழைத்துச் செல்கிறேன். தங்கள் மகன் சொன்ன சொல்லைக் காப்பாற்றுமாறு பார்த்துக் கொள்வது தங்கள் பொறுப்பு'' என்றார்.

செல்வியின் மலரடியில் தன் சிரசைப் பதித்துப் பாதங்களில் கண்ணீர்த் துளிகள் சிந்த, எதிரிலிப் பெருமான் ஆன வல்லபன் கூறுவான்: ''முதலில் என் தாயின் மீது

ஆணை. தாய் சொல்லை என்றும் தட்டவே மாட்டேன்.''

**சோ**ழச் சக்கரவர்த்திகளைச் சந்தித்த பிறகு வல்லபனுக்குப் புதுப் பிரச்னையொன்று எழுந்தது. இளவரசுப் பட்டம் சூட்டும் நாளைக் குறிக்க அரசர் கட்டளையிட்டு விட்டார். அதற்கான ஏற்பாடுகளை விரைவில் செய்யுமாறும் அதிகாரிகளுக்கு உத்தரவிட்டார். அத்துடன், பெருமான் நம்பியிடம் அவர் கூறிய மற்றொரு செய்தி, வல்லபனைத் திடுக்கிடச் செய்தது. அது, திடுக்கிடும்படியான செய்தி இல்லைதான். குதூகலிக்க வேண்டிய மங்கலச் செய்திதான் அது.

இளவரசர்ப் பட்டம் சூட்டிக் கொள்ளும் தக்க வயது வந்தவர்க்கு உடன் திருமணத்தையும் முடித்து வைக்கும் பரம்பரைச் சம்பிரதாயம்தான் அது.

''பெருமான் நம்பி அவர்களே, இரண்டு முக்கியமான காரியங்களைத் தாங்கள் செய்ய வேண்டும். வல்லபனுக்கு அபிடேகப் பெயர் ஒன்று சூட்ட வேண்டும். நமக்கு வேண்டிய அரச குல மங்கை நல்லாள் ஒருத்தியை அவனுக்கு மணம் முடிக்கத் தேர்ந்தெடுக்க வேண்டும்.''

''பெருமான் நம்பி சற்று யோசித்தார். ''அபிடேகப் பெயரைச் சூட்டுவதைக் குறித்து நாம் உடனே கலந்து ஆலோசித்து விடலாம்; அதில்கூட நான் ஒரு யோசனை சொல்ல விரும்புகிறேன். இளவரசுப் பட்டம் சூட்டும்போது அபிடேகப் பெயர் அவசியமில்லை. தக்க அரச குலப் பெண்டிரைத் தேர்ந்தெடுப்பதில்தான் தீர்க்காலோசனை தேவை. மற்றவர்களைக் கலந்து யோசிப்பதை விடத் தாங்களே முடிவு செய்து அறிவிப்பதுதான் சரி என எனக்குத் தோன்றுகிறது'' என்றார்.

அப்போது மலையமான் அங்கு வந்தார். வல்லபனுக்குத் திருமணம் என்ற செய்தி அவரைச் சிந்திக்க வைத்தது. திருமணப் பிரச்னை மூவரைச் சிந்திக்க வைத்தது.

பெருமான் நம்பிக்குத் தன் பெண்ணைச் சோழ அரச குலத்தவரொருவருக்கு மணம் முடித்து அரச குலத்தவருடன் சம்பந்தப் படுத்திக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் உடனே எழுந்தது.

மலையமான் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டார். அவரது சகோதரருக்கு அழகிய மகள் இருந்தாள்.

''நம்ம கல்யாணத்தை எப்போ வச்சுக்கலாம்?''

''கொரின் நல்லாக் கிடைக்கும்போது வச்சுக்கலாம்!''



வல்லபனுக்கு இளவரசுப் பட்டம் என்பது உறுதியாகி விட்டது. மலையமான் குலத்துப் பெண்ணை மணம் புரிவித்துச் சோழர்களுடன் மீண்டும் ஏன் தொடர்பு கொள்ளக் கூடாது? இந்த நல்வாய்ப்பை இழந்து விடக் கூடாது என்று முடிவு செய்து கொண்டார். பெருமான் நம்பியும் மலையமானும் அரசரிடம் தக்க தருணம் பார்த்துத் தனித் தனியே சொல்ல விரும்பினர்.

வல்லபன் கவலை தோய்ந்த முகத்துடன் தாயிடம் சென்றான்.

''அன்றலர்ந்த செந்தாமரையினை வெல்ல வேண்டிய உன் முகம் கூம்பிப் போயிருக்கிறதே என்ன நேர்ந்தது வல்லபா?'' என்று கேட்டாள் செல்வி பரபரப்புடன்.

''தாயே! எனக்குத் திருமணமும் உடனே நடந்தாக வேண்டுமாம்! பட்டமேற்பு விழா நிகழ்ச்சியின் போது இளவரசர் இளவரசியுடன் அமர வேண்டுமாம்! அம்மா, இங்கே விரைவாக நடப்பன எல்லாம் மிகவும் விசித்திரமாகவும் இருக்கின்றன'' என்றான்.

செல்வி அவ்வாறு கலகலவென்று நகைத்துப் பல ஆண்டுகளாகி விட்டன.

''மகனே! இதில் வருத்தப்பட என்ன இருக்கிறது? என் மகன் இளவரசன்! என் மகனுக்குத் திருமணம்! எனக்கு மருமகள் வரப் போகிறாள்! ஆகா, இதை விட மகிழ்ச்சியான செய்தி வேறு என்ன இருக்கிறது?'' என்றாள்.

தாயின் முகத்தில் ஏற்பட்ட மகிழ்ச்சியைக் கண்ட வல்லபன் தன் எண்ணத்தை எப்படி வெளியிடுவது என்று திகைத்தான்.

வேங்கியில் உள்ள சந்திரப்ரபாவின் அந்த இருவிழிகள் அவன் கண் முன்னே தோன்றின. விரைவில் திரும்பி வருவதாக உறுதி கொடுத்து வந்த போது ஏக்கம் நிறைந்த விழிகளுடன் விடை கொடுத்த அந்த முகம் நினைவுக்கு வந்தது.

''வேங்கியிலிருந்து சந்திரப்ரபாவை இங்கே வரவழைத்துத் திருமணம் செய்து கொள்ளக் கூடாதா? சோழநாட்டு இளவரசியாக அவள் ஆகக் கூடாதா? அருமைக் காதலி வேங்கியில் இருக்கும்போது, மற்றொரு பெண்ணை நான் எவ்வாறு மணப்பது?'' என்ற கவலை அவன் மனத்தில் சுழன்றது.

''மகனே! ஏன் மௌனமாகி விட்டாய்? ஏன் உன் முகத்தில் சோகம் நொடிக்கு நொடி வளர்கிறது? உன் உள்ளத்தில் தோன்றியுள்ள வேதனைதான் என்ன?'' என்று செல்வி கேட்டாள்.

வேங்கியில் தனக்காக ஒருத்தி காத்திருக்கிறாள் என்பதைத் தாயாரிடம் சொல்லி விடலாமா என்று வல்லபன் எண்ணினான். தாய் வருத்தப் படுவாளோ என்பதை நினைக்கும் போது, அந்த இரகசியத்தைச் சொல்லாமலே இருக்கலாம் என்றும் தோன்றியது.

ஆனால், செல்வி அவனை மிகவும் வற்புறுத்திக் கேட்ட பிறகு வல்லபன், தான் காதலித்திருக்கும் கீழைச் சாளுக்கிய நாட்டு மங்கை சந்திரப் பிரபாவைக் குறித்துச் சொன்னான். அது கேட்டுச் செல்வி திடுக்கிட்டாள்.

(தொடரும்)

# அரிப்பும் எரிச்சலும் தரும் வியர்க்குருத் தொல்லையிலிருந்து விடுதலை பெறுவீர்!



**நைஸில்**
உபயோகிப்பீர்
மிகத்துரித நிவாரணம்
அளிக்கும்
வியர்க்குரு பவுடர்.




வாங்குவீர் நைஸில்—
விரட்டுவீர்
வியர்க்குருவை.
விலை
6 ரூ. 63 பைசாதான்.*



* அதிகபட்ச சில்லறை விற்பனை விலை.
உள்ளூர் வரிகள் தனி.

GN-78-Tam-358 E

# அவனுக்காக

## உமா சந்திரன்

**கிணகிண** வென்று மணி ஒலித்தது. பகல் இடைவேளை. சாப்பாட்டு நேரம். ரவியின் மனத்தில் எரிச்சலையே உண்டாக்கியது அந்த ஒலி. இந்தச் சாப்பாட்டு நேரம் என்று எதற்காகத்தான் வருகிறதோ! ஒவ்வொருநாளும் காலையில் அவனுடைய அம்மா அவனைச் சாப்பிட வைப்பதற்கு என்ன பாடு பட வேண்டி இருக்கும்! அம்மாவின் கட்டாயத்துக்காகத்தான் வேண்டா வெறுப்பாக ஏதாவது சாப்பிடுவான்.

ஸ்கூலுக்குப் புறப்படுவதற்குள் அவன் வயிறு நிறையச் சாப்பிட வேண்டும் என்று அம்மா எவ்வளவு கண்டிப்பு பண்ணுகிறாளே, அதோடு விடுகிறாளா! பகலில் அவன் சாப்பிடுவதற்காக டிபன் பாக்ஸ் நிறைய இட்லியோ தோசையோ வேறு ஏதாவது சிற்றுண்டியோ வைத்து அனுப்புவாள். கூடவே பழம் வேறு. அதையெல்லாம் ரவி முழுமையாகச் சாப்பிட்ட நாளே கிடையாது. சில நாட்களில் டிபன் பாக்ஸைத் திறக்காமலே வீட்டுக்குத் திருப்பி எடுத்துக் கொண்டு போய் விடுவான்.

ரவியின் அப்பா பிரபலமான டாக்டர். ஆயிரக் கணக்கில் வருமானம். பம்பரமாக உழைத்துக் கொண்டிருப்பார். மனைவியுடனும் குழந்தையுடனும் நின்று நிலைத்து நாலு வார்த்தை பேசக் கூட அவருக்கு நேரம் இருக்காது. எப்போதாவது அவர் ஓய்வாக இருக்கும் சமயத்தில் ரவியின் தாயார் அழாத குறையாக அவரிடம் புகார் செய்வாள்.

டாக்டர் சிரிப்பார். 'ராஜி, நீ ஏன் வீணாக அலட்டிக் கொள்கிறாய்? அவனை அவன் போக்கில் விட்டுவிடு. தானாக விரும்பி அவன் சாப்பிடுவதுதான் அவன் உடம்பில் ஒட்டும், எவ்வளவுக்கெவ்வளவு நீ அவனைச் சாப்பிடச் சொல்லி வற்புறுத்துகிறாயோ அவ்வளவுக்கவ்வளவு அவனுக்குச் சாப்பாட்டின் மேல் வெறுப்பு தான் உண்டாகும்!'' என்பார்.

ஆனால் அம்மாவுக்கு மனம் கேட்காது. ஒரே பிள்ளை. அவன் நன்றாகச் சாப்பிட்டு மதமதவென்று வளர வேண்டுமென்று ஆசை இருக்காதா? ஆனால் ரவிக்கு அம்மாவின் ஆசை புரிந்தால் தானே! அம்மா தன்னை அர்த்தமில்லாமல் வதைப்பது போலத்தான் அவனுக்குத் தோன்றும். அப்பா எவ்வளவு நல்லவர்! அவர் சொல்வதைக் கேட்காமல் அம்மா ஏன் ஒவ்வொரு நாளும் என்னுடன் மல்லுக்கு நிற்கிறாள்?

வகுப்பறை காலியாகி விட்டது. பிள்ளைகள் எல்லோரும் அவரவர் கொண்டுவந்திருந்த சாப்பாட்டை எடுத்துக்கொண்டு வெளியே தோட்டத்துக்குச் சென்றுவிட்டார்கள். அங்கங்கே மரத்தடியில் கும்பல் கும்பலாக உட்கார்ந்து அவர்கள் சாப்பிடவும் ஆரம்பித்திருந்தார்கள்.

ரவியும் வேண்டா வெறுப்பாக டிபன் பாக்ஸை எடுத்துக் கொண்டு வெளியில் சென்றான். சிரித்துப் பேசிக்



கொண்டு சாப்பிட்டுக்கொண்டிருந்த மற்றப் பிள்ளைகளுடன் கலந்து கொள்ள அவனுக்கு இஷ்டமில்லை. அவர்கள் எதிரில் டிபன் பாக்ஸைத் திறந்தால், அம்மா அந்த டிபன்பாக்ஸ் கொள்ளாமல் அடைத்து வைத்திருக்கும் டிபனைப் பார்த்துக் கேலி செய்வார்களோ என்ற பயம் அவனுக்கு. பிள்ளைகள் நடமாட்டம் அதிகமாயில்லாத பகுதியாகப் பார்த்து அந்தப் பக்கமாகச் சென்றான்.

ஸ்கூல் கட்டிடத்தின் இடப்பக்கத்தில் அமைந்த குறுகலான தோட்டப் பகுதி அது. அந்தப் பக்கத்தில் காம்பவுண்டுச் சுவருக்குப் பதிலாக முள்வேலிதான் அமைந்திருந்தது. அந்த வேலியை அடுத்து அகலமான சாலை. கார்களும் பஸ்களும் ஸ்கூட்டர்களும் அந்தச் சாலையில் போய் வந்த வண்ணம் இருந்தன. கல் மேடைமேல் உட்கார்ந்து அவற்றையெல்லாம் வேடிக்கை பார்ப்பது ரவிக்குப் பிடித்தமான பொழுதுபோக்கு.

இப்பொழுது சில நாட்களாக அந்தச் சாலையைக் கடப்பதற்கு வசதியாகச் சுரங்க வழிப் பாதையை உருவாக்கும் வேலை நடந்து கொண்டிருந்தது. ஆண்களும் பெண்களுமாக நிறையப்பேர் அந்த வேலையில் ஈடுபட்டிருந்தனர். நடைபாதையிலேயே அங்கங்கே சிறுசிறு கூரைக் குடிசைகளை அமைத்துக் கொண்டு குடித்தனம் நடத்திக் கொண்டிருந்தனர்.

போக்குவரத்தின் பரபரப்பைச் சிறிது நேரம் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த பிறகு ரவி டிபன் பாக்ஸைத் திறந்தான். அதில் சாதாரணமாக இட்லியோ தோசையோ அடைத்து வைத்து அனுப்பும் அம்மா, இன்று சிறுசிறு வட்டங்களாக பூரிகளை அடுக்கி வைத்திருந்தாள். தொட்டுக் கொள்வதற்கு ஒரு கிண்ணத்தில் உருளைக் கிழங்கு கறி. அவன் எதிர்பாராமல் அதில் இருந்த பூரியும் கிழங்கும் அவற்றை ருசி பார்க்க வேண்டுமென்ற ஆவலைத் தூண்டி விட்டன. ஒரு பூரியை விண்டு உருளைக் கிழங்குடன் சேர்த்து எடுத்துக் கொண்டு வாயில் போட்டுக்கொள்வதற்காக நிமிர்ந்தான். அப்போது வேலியருகே நின்றிருந்த ஒரு சிறுவனின் ஏக்கப் பார்வை அவன் கண்களில் பட்டு விட்டது.

ஒரு கிழிசல் டிராயரும் ஓர் அழுக்குப் பனியனும் மட்டுமே அணிந்திருந்தான் அந்தச் சிறுவன். அவன் கண்கள்தான் பெரிதாக இருந்தனவேயொழிய முகத்தில் சதைப் பற்றே இல்லை. கைகால்களும் ஒட்டி உலர்ந்திருந்தன. அந்தப் பையன் ரவியின் டிபன் பாக்ஸையே ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டிருந்தான்.

ரவி எழுந்து அவன் அருகே சென்றான்:

''ஏன் அப்படிப் பாக்கறே?''

அந்தப் பையனுக்கு வெட்கமாகப் போயிருக்க வேண்டும். தலையைக் கவிழ்த்துக் கொண்டு வேறு பக்கம் பார்த்தவாறு, ''ஒன்றுமில்லை'' என்று தன் வாய்க்குள்ளேயே சொல்லிக்கொள்வதுபோல் சொன்னான். அந்த வார்த்தை அன்னத்தில் ஒட்டிக்கொண்டு வெளிவர மறுத்தது போல் தோன்றியது.

''நீ பள்ளிக் கூடத்துக்குப் போகலியா?'' என்று கேட்டான் ரவி.

''போகலே.''

''ஏன்?''

''எங்கம்மா என்னைப் பள்ளிக் கூடத்துக்கு அனுப்பலே.''

''உங்கம்மா எங்கே இருக்கா?''

''அதோ, அந்தாண்ட வேலை செய்துக்கிட்டிருக்கா. எங்க வீடு கூட அங்கதான். குடிசை தெரியுதே...''

''அம்மா ஏன் வேலை தேடணும்? அப்பா வேலை செய்யலியா?''

''அப்பா எப்பவோ செத்துட்டாரு. அம்மா தான் உழைக்குது. கழுத்துநோவ மண்ணு சொமக்குது.''

''அதெல்லாம் எதுக்காகச் செய்யணும் உங்கம்மா?''

''செய்யலேன்னா சாப்பிறடது எப்பிடி? பாடுபட்டு உழைச்சாத் தானே கூழோ கஞ்சியோ குடிக்க முடியும்?''

''கூழ்! கஞ்சி! ஐயே! அதெல்லாமா குடிப்பே? ஒனக்கு ஜுரமா?''

''இல்லையே. ஏன் கேக்கறே?''

''எனக்கு ஜுரமா இருந்தாத்தான் எங்கம்மா எனக்குக் கஞ்சி குடுப்பா.''

''எங்க வயத்துக்குப் பசி நேரத்தில் கஞ்சி கிடைச்சா போதாதா? அம்மா நாள் முழுதும் பாடுபட்டாலும் கால் வயத்துக் கஞ்சி கூடக் கிடைக்கிறதில்லே!''

''என்ன சொல்றே? எனக்கு ஒண்ணும் புரியலே. இப்பவும் நீ கஞ்சிதான் சாப்பிட்டுட்டு வந்தியா?''

''இப்ப ஏது கஞ்சி? பொழுது சாயும் போதுதான் அம்மாவுக்கு வேலே முடியும். இன்னிக்குச் சம்பள நாள். காசு கைக்கு வந்ததும் அரிசி வாங்கி அதுக்குமேலதான் கஞ்சி காச்சிக் குடுக்கும் அம்மா!''

''அது வரைக்கும் என்ன செய்வே?''

''ரெண்டு நாளா இருக்கற மாதிரித்தான். பட்டினி!''

''ஒண்ணும் சாப்பிடாமலா?''

''சாப்பாடாவது சாப்பாடு! அம்மா கைக்கு வார கூலி நாலு நாள் கஞ்சிக்குக் கூடப் பத்த மாட்டேங்குது!''

பாதி புரிந்தும் புரியாமலும் அந்தப் பையனை ஏற இறங்கப் பார்த்தான் ரவி. ஏனோ அவன் மனத்துள் ஓர் அழுகை குமுறியது.

''நீ, பூரி சாப்பிடறயா?''

''நீ வச்சிருக்கற சாப்பாட்டுக்குப் பேரு அதுதானா? நான் ருசி பாத்ததே இல்லே.''

''இந்தா, இதைச் சாப்பிட்டுப் பாரு!'' — ரவி தன் கையில் வைத்திருந்த, உருளைக் கிழங்கோடு சேர்ந்த பூரி விள்ளலை முள்வேலி இடுக்கு வழியே அந்தப் பையனின் கையில் கொடுத்தான்.

ஆவலுடன் அதை வாயில் போட்டுக் கொண்டு சுவைத்தான் அந்தப் பையன்!

''நல்லாயிருக்கா?''

''எப்பிடிச் சொல்றதுன்னே தெரியலே: கஞ்சிக்கு மொளகா தொவையல் கெடைச்சாலே மேலு! இது நல்லா இருக்கறதுக்குக் கேக்கணுமா?''

''இன்னும் சாப்பிடறயா?''

''ஓ! நீ குடுத்தாச் சாப்பிடறேன்!''

ரவி ஓடிச் சென்று டிபன்பாக்ஸையே எடுத்துக் கொண்டு வேலியருகே மீண்டும் வந்தான். பூரியும் கிழங்குமாக அள்ளி அந்தச் சிறுவனின் கையில் கொடுக்கப் போனான்.

''ஊஹூம்! நீ சாப்பிடாம எனக்குக் குடுக்கறியே! நீயும் சாப்பிட்டாத்தான்!'' என்றான் அந்தப் பையன்.

# குளோஸ் அப் கு



## ஆர்.என்.ரத்னம்

● இ. ஐ. டி. பாரி நிறுவனத்தில் துணை நிர்வாக இயக்குனராய்ப் பணியாற்றும் இவர் அண்மையில் தென்னிந்திய எம்ப்ளாயர்ஸ் ஃபெடரேஷனின் தலைவராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்.

தினமும் காலையில் ஒன்றரை மணிநேரம் நடப்பதும் யோகாசனம் செய்வதும் இவருடைய பழக்கங்கள். கால்ஃப்ஆட்டத்திலும், நிறையப் புத்தகங்கள் படிப்பதிலும் விருப்பமுள்ள இவர் தமிழ்நாடு கிரிக்கெட் சங்கத்தில் உறுப்பினர்.

தொழிலாளர் விசுவாசம் என்பது பாரி கம்பெனிகளில் மிகவும் உயர்ந்த நிலையில் உள்ளது என்று கூறும் இவர், இரண்டு மூன்று தலைமுறைகளாய்ப் பணியாற்றுவோரும் நிறுவனத்தில் உண்டு என்று பெருமையுடன் சொல்கிறார்.

மத்திய மாநில அரசுகளின் உதவியுடன் ''தொழிலாளர் கல்வித் திட்டம்'' செயல்படுகிறது. தொழிலாளர்களைத் திறமையானவர்களாகவும் நல்ல குடிமக்களாகவும் பண்படுத்தும் இந்தத் திட்டத்தின் கீழ்ப் பாரி நிறுவனம் மூன்று முறை கேடயங்கள் வென்றுள்ளது.

பாரி நிறுவனத்தில் படிப்படியாக உயர்வு பெறமுடியும் என்றும், தற்போதைய மானேஜிங் டைரக்டர், 43 ஆண்டுகளுக்கு முன்னால், சாதாரண ஜூனியர் எக்ஸிக்யூடிவ் ஆகச் சேர்ந்து இன்று உயர்நிலை பெற்றவர்தான் என்றும் சொல்கிறார் திரு ரத்னம்.

## தீபம் நா. பார்த்தசாரதி

● சில ஆண்டுகளுக்கு முன்னால் நா. பா. பெங்களூர் சென்ற போது, அதே விமானத்தில் நடிகை ஜெயலலிதாவும் தன் தாயாருடன் பயணம் செய்தாராம். பெங்களூர் விமான நிலையத்தில் நடிகை உடனடியாகக் காரில் ஏறிப் போய்விட்டார். வரவேற்க வருவதற்காகக் காத்திருந்த இவரையும் சினிமாச் சம்பந்தப்பட்டவர் என்று நினைத்துக்கொண்ட ரசிகர்களிடையே இவர் அகப்பட்டுக் கொண்டாராம். ''நான் சினிமா சம்பந்தப்பட்டவன் இல்லே... எழுத்தாளன்'' என்று சொல்லித் தப்புவது பெரும் பாடாகி விட்டதாம்.

இருபத்து நாலு ஆண்டுகளுக்கு முன்னால், இவர் பத்திரிகையில் ஆசிரியராய்ப் பணியாற்றிக் கொண்டு பத்திரிகைகளிலும் சிறு கதைகள் எழுதிக் கொண்டிருந்த காலம், நா. பா. வின் நண்பர் ஒருவர், இவருக்குச் சினிமா முக வெட்டு இருப்பதாய்க் கருதி, அவருடைய புகைப்படம் ஒன்றை ஜெமினி ஸ்டுடியோவுக்கு அனுப்பி



''உனக்காக நானும் சாப்பிடறேன்!'' என்று கூறிய ரவி டிபன் பாக்ஸில் இருந்ததை அந்தப் பையனுடன் பகிர்ந்து கொண்டு சாப்பிட ஆரம்பித்தான். பூரியும் கிழங்கும் ருசியாக இருந்ததுபோல் அவனுக்குத் தோன் றியது.

''என் பேரு ரவி, உன் பேரு?''

''மாரி.''

''மாரி, தினமும் நீ இங்கே வாயேன். எங்கம்மா எனக்குத் தினமும் இந்த டிபன் பாக்ஸ் நிறைய குடித்தனுப்பரு. ரெண்டு பேரும் சேர்ந்து சாப்பிடலாம். உன் கூடச் சாப்பிட்டா எனக்கு சந்தோஷமா இருக்கு. சாப்பாடு ரொம்பப் பிடிச்சிருக்கு. வரு வியா?''

''ஓ! வரேனே!''

சாப்பாட்டு நேரம் முடிந்து விட்டதற் கான மணி ஒலித்தது.

''கட்டாயம் வரணும் மாரி!'' என்று கூறிய ரவி? ஸ்கூலை நோக்கி விரைந்தான்.

மாலையில் ரவி வீடு திரும்பிய போது அவ னுடைய டிபன்பாக்ஸ் காலியாக இருப்பதைப் பார்த்து அம்மாவுக்கு ஒரே சந்தோஷம்.

''பூரியும் கிழங்கும் நல்லா இருக்குதா ரவி!''

''ரொம்ப நல்லா இருந்துதும்மா! நல்லா சாப்பிட்டேன். மாரியும்தான்!''

''மாரியா! யாரது?''

''என் ஃப்ரெண்டு. அவனோட அம்மா மண் சுமக்கிற வேலை செய்யறா!'' என்று கூறிய ரவி, மாரியும் தானும் சாப்பிட்டதை விவரித் தான்.

''தினமும் மாரிக்கும் சேர்த்து டிபன் குடுத் தனுப்பறியா அம்மா?''

சிரிப்பதா அழுவதா என்று தெரியவில்லை அம்மாவுக்கு.

''ஏம்மா பதில் சொல்ல மாட்டேங்கறே?''

''குடுத்தனுப்பறேன் ரவி. நிறைய குடுத் தனுப்பறேன். எப்படியோ, நீ விரும்பிச் சாப் பிடறேன்னு சொல்லறியே, அது போதும் எனக்கு!'' என்றாள் அம்மா.

மாரியை வாழ்த்தத் தோன்றியது அவ னுக்கு.

# அப் க்ளோஸ் அ

வைத்து விட்டார். அங்கிருந்து பேட்டிக்காக அழைப்பும் வந்துவிட்டது. இதை உடனே நா. பா.விடம் சொல்லாமல், மாமல்லபுரம், சென்னை சுற்றிப் பார்க்கஎன்று அழைத்துக் கொண்டு ஜெமினி ஸ்டுடியோவில் வந்துதான் நடந்ததைச் சொன்னாராம். வேறு வழியின் றி நா.பா. பேட்டிக்குத் தயாரானபோது, இவர் கதை எழுதுகிறவர் என்பதை அறிந்த நடிகர் – தேர்வுப் பொறுப்பிலிருந்தவர் சொன்னாராம்:

''இது ஏன் சார் பேஜார் புடிச்ச தொழில். நல்லா எழுதுறீங்க. அதுலேயே இருங்க ளேன்.'' – என்று.

இப்போது இலக்கியத்தில் எம். ஏ. தேர்வை முடித்து விட்டார்.

## அரவிந்த பாலா பழனூர்

● ஆறடிக்கும் கூடுதலான உயரமுள்ள ஐந்து நாடாளுமன்ற உறுப்பினர்கள் எப் போது சந்தித்தாலும் ஒருவர் வலது தோளில் மற்றவர் தமது தோளைச் செல்லமாய் இடித்துக் கொள்வார்கள். ''நாங்கள் எப் போதும் விழிப்புடன் இருக்கிறோம்'' என்று இதற்குப் பொருளாம். இந்த ஐவரில் ஒருவர் தான் அ. இ. அ. தி. மு. க. உறுப்பினர் அர விந்த பாலா பழனூர்.

பழையனூர்க் காரர்கள் இழைத்த கொடு மையைக் கண்டு வெருண்ட சுமார் நூறு பேர், ஊரைக் கொளுத்தி விட்டுப் பல்வேறு இடங்களில் குடிபுகுந்தார்கள். அப்படி ஒருவர் காரைக்கால் திருவேட்டக் குடியில் குடியேறி னர். அந்தக் குடும்பத்தார் தம்மைப் ''பழைய ஊரிலிருந்து வந்த வீரர்கள்'' (Le Valliant De Pajanur) என்று அழைத்துக் கொண் டார்கள். அந்தக் குடும்பத்தின் தற்போதைய ஒரு கிளை இவர். பட்டப் பெயர் இப்போது ''பழனூர்'' என்று சுருங்கி விட்டது.

இவருடைய தந்தை அ. பழனூர்தான் மகாத்மா காந்தி, பாரதியார் இவர்களுடன் தொடர்புகொண்டு, விடுதலை இயக்கத்துக்குப் புதுச்சேரியில் வித்தூன் றியவர். குடியரசு என்ற பெயரில் ஒரு பத்திரிகையும் நடத்தினர்.

பத்துமாதப் பெண் குழந்தை, ஆறுவயது பாலா மற்ற குழந்தைகளை விட்டுவிட்டுத் தந்தை காலமானபோது நாடு விடுதலை பெற வில்லை. தாயார்தான் இவர்களைப் படிக்க வைத்து ஆளாக்கினர்.

லயோலாவில் இவர் படித்த போது உடன் பயின்றவர்களுள் ஒருவர் டென்னிஸ் கிருஷ் ணன். ''தரமான நூல் களை மட்டும் அவை எதைப் பற்றியதாயிருந் தாலும், படிப்பது தான் எனக்குப் பிடிக் கும்'' என்கிறார் வழக் கறிஞர் பாலா பழனூர்.



– யெஸ்பால்



## கே.எஸ்.கோபாலகிருஷ்ணன் பேட்டி

# துணிச்சல் மிக்க இயக்குனர்

இயக்குனர் கே. எஸ். கோபாலகிருஷ்ணனுக்குப் பிடித்த படம் கற்பகமாகத்தானிருக்கும் என்று எல்லோரும் நினைப்பார்கள். ஆனால் உண்மையில் அவருக்குப் பிடித்த படம் ''கை கொடுத்த தெய்வம்'' தான். அதைப் பற்றி அவர் கூறுகிறார்:

''இந்தப் படத்தில் வரும் எல்லாப் பாத்திரங்களுமே நினைவில் நிற்கக் கூடிய வகையில் அமைந்த பாத்திரங்கள். ஓரிரு காட்சிகளில் வரும் வக்கீல் கூடத்தான். அது மட்டுமல்ல. எம். ஆர். ராதாவின் பாத்திரத்தைத் தவிர மற்ற எல்லாரும் நல்லிதயத்தினர்.

''ஆழ்ந்த நட்புக்குப் படம் ஓர் உரைகல். அதே நேரத்தில் வெறும் அவதூறுகளாலும், வதந்திகளாலும், ஏற்படும் தீமைகளைத் தெள்ளத் தெளிய விளக்கும் அபாய அறிவிப்பாகவும் இந்தப் படம் விளங்கியது. இதில் என்னைக் கவர்ந்த காட்சிகள் பல என்றாலும் ஒன்றிரண்டை மட்டும் இங்கே குறிப்பிட விரும்புகிறேன்.

''இரண்டு நெருங்கிய நண்பர்கள். அதில் ஒருவன் ஒரு வட இந்தியப் பெண்ணை மணந்து கொள்கிறான். அந்த வட இந்தியப் பெண்ணுக்குக் கணவன் எதிரிலேயே நண்பன்



புடவை கட்டி விடுகிறான். கேட்பவருக்கும், படிப்பவருக்கும் இது அருவருப்பாக இருக்கும். ஆனால் இந்தக் காட்சியை நான் எடுத்த விதம் பலர் கண்களில் கண்ணீரை வரவழைத்தது. மக்களும், பத்திரிகைகளும் ஏகோபித்துப் பாராட்டினர்.

''நள்ளிரவில் தன் இளம் மனைவியை நண்பனுக்குப் பணிவிடை செய்ய விட்டுச் செல்கிறான் கணவன். இதைவிட மற்றொரு காட்சிதான் எல்லோருடைய கவனத்தைக் கவர்ந்தது. ஒரு கள்ளங் கபடமற்ற ஆணிதயம் கபடு சூதற்ற குழந்தை உள்ளம் படைத்த ஒரு பெண்ணின் புனிதத் தன்மையைப் புரிந்து கொள்கிறது. அவளைத்தான் மணந்து கொள்வேன் என்றும் முடிவு செய்கிறது. அந்த முடிவுக்கு எதிராக அந்த ஆணைப் பெற்றெடுத்த தாயே குறுக்கே நின்று ''நீ மணக்கப் போகும் பெண் நடத்தை கெட்டவள் என்று உலகமே முடிவு செய்திருக்கிறது. ஆனால் நீ ஒருவன் மட்டும் புனிதமானவள் என்று சொல்கிறாய். அவள் நல்லவள் என்பதற்கு நீ எதை ஆதாரமாகக் காட்டுகிறாய்?'' என்று கேட்க, அவன், 'என் தாய் நல்லவள் என்பதற்கு நான் என்ன ஆதாரம் தர முடியும்'' என்று கேட்கும் கட்டம் மயிர்க்கூச்செறிய வைக்கும் இடம். இந்தக் காட்சியைக் குறிப்பிட்டு ஒரு ஆங்கிலப் பத்திரிகை தனது விமரிசனத்தில் 440 வாட் மின்சாரம் உடலைத் தாக்கியது போல் இந்தக் காட்சி தாக்குகிறது என்று பாராட்டி எழுதியது.''

''வசனம்தான் உங்களுக்கு உயிர் நாடி என்று கூறப்படுவதற்கு உங்கள் பதில்?''

''படத்திற்கு வசனம் தேவைதான். ஆனால் வசனம்தான் படம் என்று சொன்னால் எப்படி ஒப்புக் கொள்ள முடியும்? நான் இயக்கிய ''வாயில்லாப்பூச்சி'' படத்தின் கதாநாயகன் படம் முழுவதும் பேசவில்லை. காரணம் அவன் ஊமை. இப்படி கதாநாயகனையே பேச வைக்காமல் எடுக்கப் பட்ட படம் அன்று வரைஅது மட்டும்தான். அதற்குப் பிறகு சில படங்கள் வந்திருக்கின்றன. 'தெய்வப் பிறவி'யில் பத்மினியைப் பேசா மடந்தையாக்கியதும் நான்தான். ''சாரதா''வில் ஒரு விஜயஸ்ரீ. இப்படிப் பல பாத்திரங்களை ஊமைப் பாத்திரங்களாகவே நான் படைத்திருக்கிறேன். எந்தக் கட்டத்தில் எந்தப்



''ஆயிரம் ரூபாய்'') இது என்ன கதை? குடும்பக் கதையா?

''பழி வாங்கும் உணர்ச்சி கூடாது என்று சொல்லும் கதை என்ன கதை? (படம் ''என்னதான் முடிவு'') எதையுமே பெரிதாகக் கற்பனை செய்து துன்பப்படும் பாத்திரங்களை வைத்து ஒரு படம் எடுத்தேன். (''சின்னஞ் சிறு உலகம்'') இவை எல்லாம் சமூகப் படங்கள் என்ற நிலையிலிருந்து மாறுபட்ட படங்கள்!

''என்னுடைய கதைகள் எல்லாமே என் கற்பனையிலிருந்து உதிப்பவை. நான் நீங்கள் கூறுவது போல் ஜேம்ஸ் பாண்ட் படங்களோ, துப்பறியும் படங்களோ எடுக்க

○ கைகொடுத்த தெய்வம் படத்தில் சிவாஜி கணேசன், எஸ்.எஸ். ராஜேந்திரன், சாவித்திரி, எம். ஆர். ராதா, கே. ஆர். விஜயா.



வேண்டுமென்றால் பல்வேறு படங்களையும், புத்தகங்களையும் காப்பியடிக்க வேண்டும். நான் அதற்குத் தயாராக இல்லை. எப்பொழுதும் என் கற்பனையைத்தான் நான் நம்புகிறேன். அதை வைத்துத்தான் கதையே செய்கிறேன்!''

''நீங்கள் இதுவரை எடுத்த படங்களில் புதுமையாகவோ, புரட்சிகரமாகவோ ஏதேனும் செய்ததாக நினைக்கிறீர்களா?''

''மிகப்பெரிய சீர்திருத்த வாதிகள் என்று சொல்லிக் கொள்ளும் எழுத்தாளர்கள், இயக்குனர்கள் எல்லோரும் சேர்ந்து எடுத்த படங்களில் கூட விதவா திருமணத்தை இலைமறைவு காய் மறைவாகத்தான் சொன்னார்கள். ஆனால் ''தெய்வத்தின் தெய்வம்'' என்ற படத்தில் விதவைக்குத் தாலியும் கட்டி, பொட்டும் வைத்த இயக்குனர் நான் ஒருவன்தான். அதுவும் Close up shotல். இந்தத் துணிச்சல் இன்றுவரை வேறு ஒருவருக்குமே வரவில்லை.''

பாத்திரத்தை வைத்துத் தரமான வார்த்தைகளால் என்ன சொல்ல முடியுமோ, அதைத் தான் நான் கவனிக்கிறேன். இதைக் குறிப்பிட்டே சென்னை வந்திருந்த வட இந்தியாவின் புகழ்பெற்ற வசனகர்த்தா இந்தர்ராஜ் ஆனந்த் என்னைப் பாராட்டினார்!''

''உங்களால் சமூகப் படங்களைத் தவிர வேறு விதமான கதைகளை, உதாரணமாக ஜேம்ஸ்பாண்ட் பாணி — படமாக எடுக்கமுடியாமைக்கு என்ன காரணம்?''

''எதைப் பற்றியும் சிந்தனையின்றி வாழும் ஒரு வானம்பாடி. பெண்ணுக்கு ஆயிரம் ரூபாய் பணம் கிடைக்கிறது. அதன் காரணமாக அவள் வாழ்க்கையே அழிகிறது. (படம்

''முழுமையான ஸ்கிரிப்ட் எடுத்துக் கொண்டு படப்பிடிப்புக்குச் செல்வீர்களா, இல்லை செட்டுக்குப் போய்த் தேவைக்கு ஏற்ப மாற்றிக் கொள்வீர்களா?''

''கதை, அதற்கு ஏற்றாற் போன்ற திரைக்கதை, ஓரளவுக்கு வசனம் இவைகளுடன் செட்டிற்குப் போவேன். ஸ்கிரிப்டை மாற்றாமல் அப்படியே எடுப்பது கட்டுச்சோற்றைத் தின்பதுபோல். ஆனால் ஸ்கிரிப்டை நடிக நடிகையரின் போக்குக்குத் தகுந்தாற்போல் மாற்றிக் கொண்டு எடுப்பது சாம்பார், ரசம், என்று தனித் தனியாகப் பரிமாறிச் சாப்பிடுவது போல். நான் இரண்டாவது வகையைச் சேர்ந்தவன்!''

பேட்டி: சலன்

# வணக்கத்துக்குரிய தலைவரே!

கே. வெங்கடேச ரவி

மகாத்மாவின் சிரிப்புக்குக் கீழ் முனுசாமி கால் கடுக்க நின்றுகொண்டிருந்தான்.

பியூன் அவனை ஏற இறங்கப் பார்த்ததோடு சரி. ஏதும் விசாரிக்கவில்லை. நீண்ட நேரத்துக்குப் பின் தானே பியூனிடம் விசாரணையைத் துவங்கினான்.

''சார், வீடு கட்ட பிளான் கொடுத்தேன், அது ஐயா கையெழுத்தாச்சான்னு...''

''பிளானு?... அதோ டைப்பிஸ்ட் பக்கத்துல உட்கார்ந்திருக்காரே அவர் கிட்டக் கேளு. அவர் தான் பில்டிங் இன்ஸ்பெக்டர்.''

முனுசாமி பியூன் குறிப்பிட்ட அந்தப் பச்சைச் சட்டை ஆசாமியை நெருங்கினான்.

''சார் வணக்கம்.''

தலையைத் தூக்கிக் கூடப் பார்க்காமல் ''என்ன வேண்டும்'' என்பது போல் தலையசைத்தார்.

''வீட்டு பிளான்...''

முடிப்பதற்குள் ''தெருப்பெயர்?'' என்றார்.

''ராயன் தெரு, முனுசாமி.''

சிறிது நேர மௌனத்துக்குப் பின் ''ஆபீஸர் பார்வைக்கு அனுப்பிட்டேன், அவரைப் போய்ப் பாருப்பா'' என்றார்.

மறுபடியும் பியூனை நெருங்க வேண்டிய அவசியம்.

இத்தனை வருஷங்கள் இதே ஊரில் இருந்து கொண்டு இந்தப் பஞ்சாயத்து யூனியன் ஆபீஸில் ஒருவரையும் தெரிந்துகொள்ளவில்லையே என்று வருத்தப்பட்டுக் கொண்டே, ''சார் ஐயாவைப் பார்த்தேன், பிளான் ஆபீஸர் ஐயாகிட்டே போயிருச்சாமே, பார்க்கச் சொன்னார்'' என்றான்.

''ம்...'' சில நிமிடங்கள் கண்களை நேருக்கு நேராகப் பார்த்துக் கொண்டிருந்து விட்டு ''அதோ தொங்குதே அந்தச் சீட்டில இதப் போல இன்னைத்துக்காகப் பார்க்கணும்னு எழுதிக்குடு.''

முனுசாமி சீட்டில் ஒன்றை உருவினான்.

''வீட்டு பிளான் சம்பந்தமாக'' என்று எழுதி பியூனிடம் நீட்ட, அதைப் பார்த்து அவன் லேசாகச் சிரித்தபடி,

''துரை இன்னு 'பி. ஏ' வா?'' என்று குத்தலாகக் கேட்டான். முனுசாமி விழிக்க, அவன் தொடர்ந்தான். ''யோவ், ஒழுங்காத் தமிழில வீட்டு வரை படம்னு எழுதாம 'பிளான்'னு எழுதறீங்களே!'' என்று அலுத்துக்கொண்டான், பிறகு ஆபீஸர் ரூமுக்குள் நுழைந்தான்.

வெளியே வந்தான்.

''ஐயா, உன்னை வரச் சொல்றார்...''

முனுசாமி உள்ளே நுழையப்போகும்போது ''மச மசன்னு நிக்காதே, ஐம்பதோ அறுபதோ வெட்டு'' என்றான் பியூன்.

உள்ளே நுழைந்ததும், ஐஞ்சாண் உடம்பையும் சில சாண்களாகக் குறுக்கிக்கொண்டு கேள்விக் குறியாக நின்று கும்பிட்டான்.

''ராயன் தெரு முனுசாமிதானே?'' அவன் தலையசைத்தான்.

''...அது பிரஸிடெண்ட் கையெழுத்துக்காகப் போயிருக்கு. சீக்கிரம் வரும்.''

''கொஞ்சம் சீக்கிரம் கொடுத்தா நல்லா இருக்கும்'' சிரிப்பை வரவழைத்துக் கொண்டு சிரித்தான்.

ஆபீஸர் பட்டும் படாமல் ''ம்'' என்றார்.

''அப்போ நான் வரேங்க'' என்று ரூமிலிருந்து வெளியே வந்தான். பியூன் ''பணம் கொடுத்தியா?'' என்றான்.

''கேட்கலியே!''

''சுத்த இவன்யா நீ. கேட்பாங்களா! கொடுக்கலேன்னு நீ வீடு கட்டின மாதிரி தான்...''

அவன் பயமுறுத்தலில் நடுங்கி, ''இப்ப என்னதான் பண்றது'' என்றான் பரிதாபமாக.

''ஐம்பது எடு. நீ கொடுத்தா ஐயா கிட்டே கொடுத்துடறேன்!''

முனுசாமி பார்வையில் சந்தேகம் தெரிந்ததை பியூன் புரிந்து கொண்டு ''இங்கேயே இரு. நான் உன் எதிரிலேயே குடுக்கறேன். சந்தேகப்படாதே, எனக்கு வேணும்னு நான் கேட்டு வாங்கிக்கிறேன்!'' என்றான்.

முனுசாமியின் பணம் பியூன் வழியே ரூமிற்குள் நுழைந்தது. பியூன் வந்து அதிகாரமாக ஐந்து ரூபாய் வாங்கிக் கொண்டான்.

முனுசாமியின் கவனம் தலைவரைச் சந்திப்பதிலேயே இருந்தது.

பஞ்சாயத்து யூனியன் தலைவரை அவனுக்கு அதிகம் தெரியாது. தேர்தலுக்காகச் சிரித்துக் கொண்டு வாசலில் ஓட்டு கேட்டபோது அவரைப் பார்த்திருக்கிறான், அவ்வளவுதான்.

வாக்கு கொடுத்தது போல அவருக்கே ஓட்டுப் போட்டான். தனக்கு உதவுவார் என்ற எண்ணத்துடன் தலைவரின் வீட்டை நோக்கி நடந்தான்.

யாரோ அவசரம் அவசரமாகத் தலைவரின் வீட்டிலிருந்து வெளியே வந்து கொண்டிருந்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''பக்கத்து வீட்டுக்காரர் தினமும் பேப்பர் ஓசி கேட்க வந்து விடுவார் என்பாயே, இப்போது எப்படி இருக்கிறார்?''

''என் மூக்குக் கண்ணாடியும் அவருக்கு ஓசியாக வேண்டுமாம்!''

—ஆரெம்.



தார். அவரை மறித்து ''தலைவர் இருக்காங்களா?'' என்று விசாரித்தான்.

தலையசைத்தபடி அவர் அவனைக் கடந்தார்.

வாசலைத் தாண்டி ரேழியுள் பிரவேசித்தான்.

ஸ்டூலில் ஒருவன் அமர்ந்திருந்தான்.

''ஏங்க, தலைவரைப் பார்க்கணும்.''

''நீங்க...''

''சொன்னாத் தெரியுமான்னு சந்தேகம். வீட்டு பிளான் சம்பந்தமாக வந்திருக்கேன்.''

''இருங்க போய்ச் சொல்றேன்.''

அந்த ஆள் உள்ளே போனான்.

''தலைவரே! யாரோ உங்களை வீட்டுபிளான் சம்பந்தமா பார்க்கணுமாம்..''

''யார்?'' தலைவர் சாவதானமாகச் சிகரெட்டை வாயிலிருந்து விலக்கியவராய்க் கேட்டார்.

''தெரியலை.''

''சரி, அவன் பேரு, தெரு எல்லாம் மெதுவா பேச்சு வாக்கில் தெரிஞ்சுக்கிட்டு என் கிட்டே வந்து சொல்லு...'' அவன் தலைவரின் ஆணைக்குப் பணிந்து வெளியேறச் செல்கையில்,

''இதோ பார் போனதும் பேரைக் கேட்டுடாதே. தலைவர் சாப்பிடறார் உட்கார்ன்னு சொல்லிட்டு விசாரி. கொஞ்ச நேரத்திற்குப் பிறகு உள்ளே வந்து விஷயத்தைச் சொல்லிட்டுச் சாப்பிட்டுட்டார்னு சொல்லிட்டு அவனை அனுப்பு.''

''இது எனக்குச் சொல்லணுமா? எத்தனை வருஷ சர்வீஸ்!''

''ம்... போ.''

வெளியே வந்தான்.

''தலைவர் சாப்பிடறார், உட்கார் வந்ததும் பார்க்கலாம்.''

முனுசாமி உட்கார்ந்தான்.

''ஆமாம், நம்ப பேரு என்னா?''

''முனுசாமி.''

''எந்த தெரு?''

''ராயன் தெரு.''

''அட! ராயன் தெருதானா!'' என்று ஆச்சரியப்படுவதாக நடித்தான். ராயன் தெருவுக்காக ஆச்சரியப்பட ஒன்றுமே இல்லை! பிறகு, சந்தேகம் வராதவகையில் மாடு, கன்று, தட்பவெட்ப நிலை, வினோச்சல் ஏரியில் தண்ணீர் என்று எதை எதையோ பேசினான்.

''சரி, இரு தலைவர் சாப்பிட்டுட்டாரான்னு பார்க்கிறேன்.'' உள்ளே போனவன் சிறிது நேரத்தில் திரும்பி வந்து முனிசாமியை வரச் சொன்னதாகச் சொன்னான்.



''வணக்கம்.''

மறுபடியும் சில சாண்கள் குறுகிக் கொண்டே உள்ளே நுழைந்தான்.

தலைவரின் தலைக்கு மேல் சுவரில் மகாத்மா சிரித்துக் கொண்டிருந்தார்.

''உட்காருப்பா'' என்றார்.

''அய்யோ, ஐயா எதிரிலேயா?''

''அட, சும்மா உட்காரு.'' இந்த அழுத்தத் தினால் கூச்சத்துடன் உட்கார்ந்தான்.

''என்ன விஷயம்?''

''ஒண்ணுமில்லேங்க, வீட்டு பிளான் ஒண்ணு, பஞ்சாயத்து யூனியன்லே குடுத்தேன்... ரொம்ப நாளாச்சு.. .இன்னிக்குப் போய் இன்ஸ்பெக்டரைப் பார்த்தா ஆபீஸரைப் பார்க்கச் சொன்னார், ஆபீஸர் உங்க கிட்டே அனுப்பிச்சுட்டதாகச் சொன்னார்.''

''என் கிட்டேயா?... இல்லேயே. என்கிட்ட வந்தா நம்ம முனுசாமிக்குச் செய்யாம யாருக்குச் செய்யப் போறேன்.''

முனுசாமிக்கு உடலெல்லாம் குளிர்ந்தது. 'அட! நம்ப பேரை நல்லா கவனம் வச்சிக்கிட்டிருக்காரே, நம்ம தலைவர், நல்ல தலைவர் மானசீகமாக அவருக்கு 'ஜே, போட்டான்.

''இதோ பார் முனுசாமி, அவனுங்க பணம் வாங்கிட்டுச் செய்யறானுங்க, நான் அதை ஆதாரத்தோட பிடிக்கத்தான் முயற்சி செய்யறேன். ஆனால் அதுவரை என்ன பண்றது, அவசரம்னு ஏதோ பணம் கொடுத்துத்தான் முடிச்சுடணும்.''

''ஐம்பது ரூபா கொடுத்தேனுங்க.''

''ஐம்பதா... ஊஹூம், அவனுங்க நூறுக்குக் கொறைஞ்சு வாங்கறதில்லே. அது தப்புதான். என்ன பண்றது. ஆதாரமில்லே. ஆனால் இன்னும் இரண்டொரு மாசத்துலே கண்டுபிடிச்சுடுவேன்.''

''நூறு ரூபாயிங்களா?''

''ஆமாம்பா. சரி, நீ வேணும்னு போ, நான் மிச்சம் ஐம்பதைக் கொடுத்து முடிச்சுக் கொடுக்கறேன். நம்ம முனுசாமிக்காக இதைக் கூட செய்யலேன்னு என்ன இருக்கு'' என்று பாக்கெட்டில் கை விட்டார் தலைவர்.

''ஐயா, ஐயா வாணுங்க, நீங்க எதுக்கு... நானே தரேன்... ஆனால் நாற்பது ரூபாய் தான் கையிலே இருக்கு...''

''பரவாயில்லே கொடு. பத்து நான் போட்டுத் தரேன்'' டணத்தை வாங்கிக்கொண்டார்.

''வெளியிலே போய் ஆபீஸர் பணம் வாங்கினதாச் சொல்லாதே. சொன்னா ஆபீஸர் ஜாக்கிரதையாயிடுவான். அப்புறம் அவனைக் கையுங்களவுமா பிடிக்கிற என் பிளான் வேஸ்ட் ஆயிடும்!'' தலைவர் உணர்ச்சி பூர்வமாகப் பேசினார்.

முனுசாமி பவ்யமாகத் தலையசைத்தான்.

''இன்னும் இரண்டு நாளில் பிளான் அப்ரூவ் ஆயிடும். தைரியமாப் போ'' என்றார்.

முனுசாமி விடை பெற்றான்.

''ரங்கா, தலைவர் கூப்பிடறேன்னு ஆபீஸருக்கு ஒரு ஃபோன் போடு.''

ரங்கன் ஆபீஸரை வரச்சொல்லிப் போன் செய்தான். ஆபீஸர் வந்தார்.

தலைவர் எதிரில் உள்ள சுவரை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தார்.

''ஏதோ முக்கியமான விஷயம்னு சொன்னீங்களாமே?''

''ம்... முனுசாமி கொஞ்ச நேரத்துக்கு முன்னே அங்கே வந்தானா?''

''யாரு, ஏதோ பிளான் கேட்டுக்கிட்டு...''

''கரெக்ட்... அவன் கிட்டே ஐம்பது ரூபாய் வாங்கினீங்களாமே!''

ஆபீஸருக்கு வியர்த்தது. ''அது வந்து... அவனே...''

''போதும். அவன் என்னுடைய கூடப்பிறக்காத சகோதரன். அவன்கிட்டே கைநீட்டி... சே... சே... என்ன சொல்றது? என்கிட்டே வந்து அழறான். உங்க மேலே ஆக்ஷன் எடுத்தாத்தான்னு ஒத்தக்காலில் நிற்கறான். என்ன பண்ண? ரொம்பத் தெரிஞ்சவன்... நீங்களும் வேண்டப்பட்டவர்... அதான் ஃபோன் பண்ணினேன் ''

''சாரி, சார்'', என்று ஆபீஸர் தயக்கத்துடன் ஐம்பது ரூபாயை நீட்டினார்.

''நான் உங்களுக்கு அட்வைஸ் பண்றேன்னு நினைக்க வேண்டாம். என் தலைக்கு மேலே சிரிக்கிற முகத்தைப் பாருங்க. இதைப் பார்த்துக் கூடவா இப்படிச் செய்யத் தோணுது.'' ஆபீஸர் காந்திஜியைக் கூனிக் குறுகிப் பார்த்தார்.

''நான் மக்களோட பிரதிநிதி. அவங்க நலனைக் காக்கவேண்டாம்? இனி இதுபோல் செய்யாதீங்க. இந்தப் பணத்தைத் திருப்பிக் கொடுத்து அவனைச் சரிக்கட்டிடறேன்!''

பலஹீனமாகத் தலையசைத்தார் ஆபீஸர்.

''பைதிபை அந்த பிளானையும் கையெழுத்துப் போட்டு அனுப்பிடறேன். விரைவில் அவருக்கு கொடுத்துடுங்க... உங்க நலனுக்குச் சொல்றேன். இனிமேல் தப்பே நினைக்காதீங்க ஓ. கே?''

ஆபீஸர் குறுகிப்போன முகத்தில் அசட்டுச் சிரிப்பை வழியவிட்டுக் கொண்டே வெளியேறினார். ஐம்பதைப் பாக்கெட்டில் திணித்தார் தலைவர்.

''ம், நூறு ரூபாய் கேஸ். பத்து ரூபா நஷ்டம்!'' என்று வருந்திக் கொண்டே சிகரெட்டை உறிஞ்சிப் புகையை மேல்புறமாக விட்டார்.

புகை காந்தி படத்தின் முன்பாக மிதந்தது.

முனுசாமியைப் பொறுத்தவரை அவர் பெருந்தன்மையான தலைவர்! ஆபீஸரைப் பொறுத்தவரை அவர் நேர்மையான தலைவர்! ஆனால், பெருந்தன்மையையும், நேர்மையையும் பொறுத்த வரை...?

---

''மார்க்கரெட் அவ ஹஸ்பெண்டோட சேர்ந்து சிகரெட் பிடிக்கிறா, பார்த்தியா?''

''நல்ல ஒற்றுமையான 'தம்' பதிகள்!'' கே. எஸ். ராமு.






## எல்லாவற்றிலும் ஆர்வம்!



## எப்பொழுதும் துடிதுடிப்பு!

உங்களுடைய குழந்தை, வளரும் பருவத்தில் ஒவ்வொரு வினாடியும் அதிகமான சக்தியை செலவழிக்கின்றான். அவனுக்கு வேண்டிய சக்தியை அளிக்கிறது—மால்ட், சாக்லெட், பால் நிறைந்த, சுவைமிகுந்த பூஸ்ட். ஏனெனில், பூஸ்ட் முழு ஆடைப் பால் கோதுமை, பார்லி மால்ட், மற்றும் கோகோவிலிருந்து தயாரிக்கப்படுகிறது.

உங்களுடைய குழந்தை ஒவ்வொரு நாளும், நாள் முழுவதும் படிப்பில் ஆர்வத்துடனும், விளையாட்டில் துடிதுடிப்புடனும் இருப்பதற்கு, சக்தி தரும் எரிபொருள்களை அவனுக்கு அளியுங்கள்.








## துடிதுடிப்புடனும், ஊக்கத்துடனும் விளங்க சக்தியளிக்கும் எரிபொருள்.

# பூஸ்ட்

மால்ட் சாக்லெட் மில்க் ட்ரிங்க்

B-5621 TAM 10



# நினைவுகள்

வலது கை நடுவிரலால் சிமிழிலிருந்து குங்குமத்தைத் தொட்டு எடுத்து, நிலைக்கண்ணாடிக்கு எதிரே அமர்ந்து, அதை நெற்றியில் நிதானமாக இட்டுக் கொண்டு மெல்ல நிமிர்ந்த போது கண்ணாடியில் நிழலாடியது.

திரும்பாமல் கண்ணாடியில் அந்த உருவத்தைப் பார்க்கிறேன்.

என் மனம் சில விநாடிகள் குளிர்ந்த நீரில் மூழ்கித் திளைக்க, மறுகணம் அந்த மெல்லிய உணர்வுகளை வலியச் சிலிர்த்து உதறி விட்டுத் திரும்பறேன்.

அவர்...

அவரை உற்றுப் பார்க்கிறேன்.

அஞ்சு வருஷங்களுக்கு முன்னால் அவரைப் பார்த்தது. காலத்தின் முத்திரைகள் அவர் உடம்பிலே நல்லாத் தெரியுது.

கன்னங்கள் ஒட்டியிருக்க, கண்கள் உள்ளே இறங்கியிருக்க, உடம்பின் பளபளப்பு குறைந்து...

அவரா இவர்?

'வாங்க' என்று கூப்பிட மனசு வரலே. ஆனா, பேசாமல் இருக்கவும் முடியலே.

''உட்காருங்க.''

உள்ளே போகத் திரும்பறேன்.

''காப்பியோ டிபனோ வேண்டாம். வர்ற வழியிலேயே ஹோட்டலில் சாப்பிட்டுத்தான் வர்றேன்.''

இவர் குரலில் முன்பிருந்த கம்பீரம் இப்போ இல்லே.

நிற்கிறேன்.

இவர் நடந்து அருகே இருந்த நாற்காலியில் உட்காருகிறார்.

''மாமா போன மாசம் தவறிட்டதா கேள்விப் பட்டேன்...''

''ஆமாம்... அப்பாவும் போயிட்டாங்க. என்னைப் பொறுத்த வரைக்கும் ஒவ்வொன்றா என் வாழ்க்கையிலே நான் இழந்துக்கிட்டே வர்றேன்!...''

''அப்பாவும்'னா? புரியலே.''

நான் இவரைப் பார்க்கிறேன். அப்புறமாச் சொல்றேன்: ''ஆறு மாசத்துக்கு முன்னாலே அம்மாவும் இறந்துட்டாங்க...''

''ஓ, காட்.''

இவர் குரலில் வியப்பும் வேதனையும் கைகோத்துக் கொண்டு நிற்க, துளிர்த்த கண்ணீரை மெல்லத் துடைத்தபடி பேசறார்:

''உண்மையிலேயே இதை எப்படித்தான் உன்னால் தாங்கிக்க முடியுதோ?''

''அஞ்சு வருஷத்துக்கு முன்னாலே எனக்குக் கிடைச்ச அதிர்ச்சியைவிட இது ஒண்ணும் பெரிசா எனக்குப் படலே...''

சாட்டையடி பட்டவர் போல் இருந்த இடத்திலேயே மெல்ல நெளியறார். என்னைத் திரும்பி இவர் ஒரு மாதிரியாப் பார்க்கிறார்.

அஞ்சு வருஷமா அழுது அழுது அவஸ்தைப் பட்ட என்னோட வேதனைக் குவியல்களுக்கு முன்னாலே இவர் இப்போ படற அவஸ்தை ரொம்பவும் குறைவாத்தான் இருக்கும்.

என் மேல் இவருக்கு ஏன் இவ்வளவு அக்கறை?

என் மேல் அனுதாபப்படவோ அக்கறை காட்டவோ இவருக்கு என்ன உரிமை இருக்கு?

இருந்த அந்தப் புனிதமான பந்தத்தை, அறுக்க முடியாத அந்தத் தெய்வீக உறவை வெட்டி வீழ்த்தியபின் என்னைப்பற்றிக் கேட்க இவருக்கு என்ன யோக்கியதை இருக்கு?

அஞ்சு வருஷத்துக்கு முன்னாலே...

யாரோ கல்பனாவாம்... ஆபீஸ் ஸ்டெனோவாம்...

அவளைக் கூட்டிக்கிட்டு வந்து என்கிட்டே அறிமுகப்படுத்திய போது நான் ஒண்ணும் தப்பா நினைக்கலே.

''இவளுக்குத் தங்க வசதியான இடம் கிடைக்கிற வரைக்கும் இங்கேயே இருக்கட்டும்... கொஞ்ச நாளைக்குத்தான்''னு இவர் சொன்னபோது கூட நான் இவரைத் தவறாப் புரிஞ்சிக்கலே.

ஆனா, அவ அந்த வீட்டிலேயே நிரந்தரமா குடியேறியதையும், என் கண் முன்னாலேயே சினிமா டிராமான்னு சுத்திட்டு, பின் அதைப் பத்தியே பேசிக்கிட்டு, ராத்திரி பத்து மணிக்கு மேலே 'கலகல'ன்னு சிரிச்சுக்கிட்டே இவ

---

பாங்க்குக்கு வந்த கொள்ளைக்காரன் காஷியரைத் துப்பாக்கிமுனையில் மிரட்டினான்: ''உம், சீக்கிரம், பணத்தையெல்லாம் எடு. சீக்கிரம், சீக்கிரம்'' காஷியர் சொன்னார்: ''இதோ பார், சும்மா மிரட்டாதே. நாங்கள் இப்போது 'கோ-ஸ்லோ' ஸ்டிரைக் செய்கிறோம். மெதுவாகத்தான் பணம் கொடுப்பேன்.''

—காரவான்.

—முத்து.





# சரிகின்றபோது...



## ஜெயவண்ணன்



ரும் அவளும் வீட்டுக்கு வரத் தொடங்கிய போது...

ஆண்டவன் என்னை ஜடமா படைச்சிருக்கக் கூடாதோன்னு ஒரு கணம் நினைச்சுப் பார்ப்பேன். அப்படிப் படைக்கலியே!

பொறுமைக்கும் ஓர் எல்லை உண்டு இல்லையா? அதனால், வாய்விட்டு ஒரு நாள் வெடிச்சேன்: ''இது உங்களுக்கே நல்லா இருக்கா?''

இவர் என்னைப் பார்த்தார். பின், மெல்ல கழுத்து 'டை'யைச் சரிசெய்துகிட்டே சொன்னார்: ''உனக்கு இந்த வீட்டிலே என்ன உரிமை இருக்கோ அந்த அளவு உரிமை கல்பனாவுக்கும் இருக்கு... எஸ், ஷி ஹேஸ் ஈக்வல் ரைட்ஸ்...''

எவ்வளவு பெரிய விஷயத்தை எவ்வளவு சர்வசாதாரணமா சொன்னார்.

மறுபடியும் அனல் காற்று வீசியது.

''அவ இனிமே இந்த வீட்டிலேதான் இருப்பா. உனக்கு இதிலே விருப்பமோ இஷ்டமோ இல்லேன்னா.. நீ உங்கம்மா வீட்டுக்குப் போகலாம்...''

என் பதிலைக் கேட்க இவருக்கு அப்போ நேரமில்லே.

வெளியே கார் புறப்படும் ஓசை கேட்டது.

வாழ்க்கையே இருண்டு விட்டது போல் ஓர் உணர்வு...

அந்த இருண்ட கண்டத்திலிருந்து ஒரேயடியா விடுபட்டு விடுதலை ஆகணும்னு ஒரு துடிப்பு...

எழுந்தேன்.

அலமாரியில் போன வாரம் வாங்கின மூட்டைப் பூச்சி மருந்து கண்முன்னாலே கண நேரம் தோன்றி மறைய...

திடீரென்று அடிவயிற்றில் ஒரு கலக்கல்...

என் உயிரைப் போக்கிக் கொள்ள எனக்கு உரிமை இருக்கோ இல்லையோ வாய்ப்பு இருக்கு. ஆனா, என்னிலே, எனக்குள்ளே, பூவாய், புழுவாய், அணுவாய், உதிரமாய் வளர்ந்து வரும் அந்த ஜீவனை அழிக்க எனக்கேது உரிமை?

முடிவை ஒத்தி வைத்தேன்.

ஆனால், இவர் தம் முடிவை மாத்திக்கவே இல்லே.

வக்கீல் கிட்டேயிருந்து நோட்டீஸ் வந்தது. விவாகரத்துக்கு இவர் எதை எதையோ காரணம் காட்டியிருந்தார். கோர்ட்டிலே எனக்கு ஜீவனாம்சம் தர்றதா சொன்னார். நான் வேண்டாம்னு சொல்லிட்டு இங்கே வந்துட்டேன்.

இப்போ!

என்னைத் தேடிக்கிட்டு இவர் இங்கே வந்திருக்கார்.

ஏன்? எதற்காக?

இவரே சொல்லட்டுமே!

''இங்கே உன்னோடு உனக்குத் துணையா யார் இருக்காங்க?''

''எனக்குத் துணையா...''

இவரோட ரெண்டு கண்களும் ஆடாம அசையாம என்னையே பார்க்குது.

''... பாஸ்கர், என் மகன் இருக்கான்.''

அப்பாடா!

நிம்மதிப் பெருமூச்சை மெல்ல உதிர விட்டுத் தம்மை ஆசுவாசப்படுத்திக் கொண்ட பின் கேட்கிறார். ''பாஸ்கர்... நம்ப பையன் பேரு அதுதானா?''

'நம்ப' என்ற வார்த்தைக்கு இவர் கொடுத்த 'அழுத்தம்' இவர் மெல்ல நெருங்கி வர்றதைக் காட்டுது.

எனக்கு நல்லா வாய் விட்டுச் சிரிக்கணும் போல இருக்கு.

''ஆமா...''

''இப்போ எங்கே பாஸ்கர்?''

''நர்சரிக்குப் போயிருக்கான்... வர்ற நேரந்தான்...''

''நான் ஒரு முட்டாள். கையிலிருந்த திராட்சைப் பழத்தை விட்டெறிஞ்சிட்டு மரத்திலே இருந்த புளியம்பழத்துக்கு ஆசைப்பட்டேன்...''

நல்லா அடிபட்டிருக்கார். அந்த வேதனை தாங்காம இங்கே வந்து விழுந்திருக்கார்.

---

## ஒன்றுக்குப் பாதி

''எந்தப் பொருள் வாங்க நீ கடைக்குச் சென்றாலும் கடைக் காரர் கூறும் விலையில் பாதிவிலைக்கே அதைக் கேட்க வேண்டும்'' என்ற தந்தையின் புத்திமதியை மகன் நன்றாகக் கேட்டுக் கொண்டான். ஆரஞ்சுப்பழம் வாங்கச் சென்றான். கடைக்காரர் ''ஒரு பழம் ஐம்பது காசு'' எனக் கூறியவுடன், ''இருபத்தைந்து பைசாவுக்குத் தர முடியுமா?'' என்று பையன் கேட்டான். கடைக்காரன் ''எனக்கு அந்த விலை கட்டுபடியாகாது. ஆனால் உனக்காகப் பத்து பைசா குறைவாகக் கொடுக்கிறேன் நாற்பது காசு கொடு'' என்று கேட்டான்.

தகப்பனார் புத்திமதியை மறவாத பையன் உடனே ''இருபது பைசாவுக்குத் தர முடியுமா?'' என்று கேட்டான். இப்போது கடைக்காரனுக்குக் கோபம் வந்து விட்டது. உடனே ஒரு பழத்தை எடுத்து அவனிடம் கொடுத்து ''ஏன்? இனமாகவே எடுத்துப் போயேன்'' என்றான். பையன் அப்பொழுதும் தயங்காமல், ''அப்படியானால் இரண்டு பழங்கள் கொடு'' என்றான்!

—புராணச் சொற்பொழிவில் ஒரு பானந்த வாரியார் கூறியது.

கேட்டவர்: சங்கர் புத்திரன்.



---

மேலே பேசறார்: ''காயத்ரி, நான் உனக்குச் செஞ்ச துரோகத்துக்குத் தண்டனை அனுபவிச்சுட்டேன்... நல்லா அனுபவிச்சுட்டேன்!''

''...''

''கல்பனா என்னை விட்டுட்டுப் போயிட்டா. சும்மா போகலே... கையிலே இருந்ததை எல்லாம் எடுத்துக்கிட்டது போதாதுன்னு என்னைக் கடன்காரனுக்கிட்டுப் போயிட்டா.''

''...''

''லஞ்சம் வாங்கினேன். ஆபீஸிலே தெரிஞ்சுட்டுது. கொஞ்ச நாள் ஜெயிலிலே இருந்தேன். வேலையும் போயிட்டுது...''

கரையேற ஒரு மரத்துண்டாவது கிடைக்காதா என்று தத்தளிக்கிற தவிப்பு...

எந்த நினைப்போடு இவர் இங்கே வந்திருக்கார்ன்னு புரியுது...

எனக்கு இவர்மேலே அனுதாபப்படத் தோணலே... இரக்கம் பிறக்கலே...

அஞ்சு வருஷமா அழுது அழுது இனிமே அழுவதற்கே கண்ணில் கண்ணீர் இல்லேன்னு வற்றி மணற்காடாகி, பின் அந்த மணற்காடு இறுகிப் பாறையா உருமாறி நிற்கிற இந்த நேரத்திலே...

ஆமாம்... என் மனசு ஒரு கற்பாறைதான். பாறையிட்டே எப்படி இரக்கத்தை எதிர் பார்க்க முடியும்?

''அம்மா.''

திரும்பறேன்.

பாஸ்கர்!

ஓடிவருகிற என் செல்வத்தைத் தாவித் தூக்கிக்கறேன்.

''இவன்தான் நம்ப பாஸ்கரா?''

இவர் கேள்வி இது.

''ஆமா...''

''யாரம்மா இது?''

பாஸ்கரின் கேள்வி இது.

நான் ஒருகணம் யோசிக்கிறேன். அப்புறம் சொல்றேன்... ''இவர்... இவர் உங்க அப்பாவோட சிநேகிதராம். உங்க அப்பாவோடு மலேசியாவில் இருக்கார். சொந்த ஊருக்கு வந்தாராம். அப்படியே உன்னைப் பார்த்துட்டு வரச் சொல்லி உங்கப்பா சொல்லி அனுப்பினாங்களாம். உனக்காகத்தான் இவ்வளவு நேரம் காத்துக்கிட்டு இருந்தார். இப்போ புறப்பட்டுப் போயிடுவார்... ஆமாம், இவர் இப்போ புறப்பட்டுப் போயிடுவார் ...''

சடேரென்று இடத்தை விட்டு எழுந்துடறார்.

''அப்பாவைச் சீக்கிரம் வரச் சொல்லுங்க.''

பாஸ்கரைத் திரும்பிப் பார்த்து, கண்களால் அவனை ஒருமுறை தழுவி விட்டு...

பின்...

''நான் வர்றேன்''னு என் முகத்தைப் பார்க்காமல் குனிந்தபடியே சொல்லிட்டு, திறந்திருந்த கதவைத் தாண்டி 'விடுவிடு' வெனத் தெருவில் இறங்கி நடக்கிறார்.

என் கண்களின் பார்வை மங்குவது போன்ற உணர்வு...

கண்களை மூடித் திறக்கிறேன்...

வாயில் உப்புநீரின் சுவை... கண்ணீர்!

நான் அழுகிறேனா?

ஸ்ரீரஸ்து - சுபமஸ்து - ஸ்ரீ வெங்கடேசப்ரசன்ன

ஜெகத்குரு ஸ்ரீ ஆசார்யாள் ஆசியுடன் சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து 1-7-79 மாலை 3 மணிக்கு III Tier sleeper பெட்டியில் 31 நாட்கள் கொண்ட எமது மஹோன்னதமான மூன்றாவது

# அமரநாத யாத்திரை

ஸ்ரீ வைஷ்ணோதேவி, ஜம்மு, அமிர்தசரஸ், காஷ்மீர், ஸ்ரீநகர், ஹரிதுவாரம், ரிஷிகேசம், திருபத்ரி, திருக்கேதாரம், டில்லி, மதுரா, ப்ருந்தாவனம், ஆக்ரா, விஜயவாடா பத்ராசலம் முதலிய க்ஷேத்திரங்கள்.

ரயில் சார்ஜ், உணவு, எல்லா பஸ் சார்ஜுகள் உள்பட நபர் 1க்கு ரூ. 1500/-

இந்த யாத்திரையில் ஈரோடு அட்வொகேட் திரு V. P. சுப்பராயன் தம்பதிகள், சென்னை நுங்கம்பாக்கம் திரு P. S. கிருஷ்ணன் தம்பதிகள் பம்பாய் திரு A. N. நாராயணன் தம்பதிகள், விருத்தாசலம் ஜவுளி வர்த்தகம் திரு M. R. G. பத்மநாப செட்டியார், கிளியனூர் மிராசுதார் திரு K. M. முத்துராம செட்டியார், சிவகங்கை திருமதி ஞான சுந்தரி அம்மாள் மற்றும் பலர் கலந்து கொள்கிறார்கள்.

இன்னும் கொஞ்சம் பெர்த்துகளே காலி உள்ளன

## ஸ்ரீ மஹாலக்ஷ்மி யாத்ரா சர்வீஸ்

21, அய்யாபிள்ளை தெரு. :: சென்னை-600001

டெலிபோன்: 841957



Mr. R. Ariff celebrated the marriage of his daughter Selvi Farida Begum with Selvan Dr. V. A. Tajudeen, M.D., (Metropolitan Hospital, New York U.S.A) at Hotel President, Madras on 22nd April '79. His Excellency Sri Prabhudas B. Patwari Hon'ble Sri M. G. Ramachandran, Chief Minister of Tamil Nadu were among the leading personalities who attended the marraige function.

Seen in the above picture are L/R: Surtaj Begum, Farida Begum, Dr. Tajudeen M.D., His Excellency Sri Prabhudas B. Patwari, Hon'ble Chief Minister Sri M. G. Ramachandran and Mr. R. Ariff.

**கன்ஸூமர் கவுன்ஸில் ஆஃப் இந்தியா**
**வின் மகத்தான கண்டுபிடிப்பு:**

மூலிகைச் செடிகளின் உதவியால்
மட்டுமே உங்கள் பற்களை நோய்
களிலிருந்து காப்பாற்ற முடியும்

# ஒரே நீம் டூத்பேஸ்ட்

# இதில் மட்டும் தான் நீம் விதையின் குணமும் மணமும் அமைந்துள்ளது

பல் டாக்டர்களின் சர்வேயின் படி பார்த்ததில் புகழ்பெற்ற டூத் பேஸ்ட்டுகள் யாவுமே பற்களை வெண்மையாக மட்டும் வைத்துக் கொள்கிறது. பல் நோய்கள் வராமல் இது காப்ப தில்லை. நோய் வராமல் தடுக்கவல்ல மூலிகையின் குணம் இப்பொழுது வரும் டூத் பேஸ்டுகளில் இல்லாதது தான் இதன் காரணம். ஆனால் நீம் டூத் பேஸ்ட் இயற்கையின் குணம் கொண்டிருக்கிறது நீம் டூத் பேஸட் நீம் விதையின் எண்ணை கொண்டு தயாரிக்கப்படுவதால் இது பற்களை வெண்மையாக வைத்துக் கொள்வதோடு மட்டுமல்லாமல் நோய்கள் உங்கள் பற்களை நெருங்க விடாமல் பாதுகாக்கிறது.




**பற்களை வெண்மையாக வும் ஆரோக்கியத்துடனும் வைத்துக் கொள்ள தவ ருமல் உபயோகியுங்கள்— நீம் டூத் பேஸ்ட்**

கல்கத்தா கெமிக்கலின் ஒரு தயாரிப்பு

# ராஜாஜி வாழ்க்கை வரலாறு

ராஜ்மோகன் காந்தி —

கோவிலடியில் நடந்தது ஒரு முன்னெச்சரிக்கையல்ல. அதை யடுத்துப் பாத யாத்திரை வீரர்கள் தங்கிய இடங்களிலெல்லாம் அவர்களுக்கு ஆனந்தமான, உற்சாகமான வரவேற்பு கிடைத்தது. வரவேற்பு வளைவுகளுக்குக் கீழ் அவர்கள் நடந்தார்கள். சாலைகளில் புழுதி எழாமல் தண்ணீர் தெளித்து வைக்கப்பட்டிருந்தது. கூட்டமும், அக்கூட்டம் எழுப்பிய கோஷமும் இவர்கள் செல்லும் வழியில் படிப்படியாக அதிகரித்துக் கொண்டே வந்தன.

இதைவிட முக்கியம், அவர்களுக்கு உண்ண உணவும் இருக்க இடமும் தரப்பட்டன என்பதுதான். தார்ன் அறிக்கை விட்டது மட்டுமல்ல, சத்தியாக்கிரஹிகளின் பாதையில் அவர்கள் எங்கெல்லாம் இராத்தங்குவது என்று திட்டமிட்டிருந்தார்களோ அங்கெல்லாம் அவர்களுக்கு முன்பாக இவர் விஜயம் செய்திருந்தார். இவ்வாறு தமது அறிக்கைக்கு அவர் பலம் சேர்த்திருந்த போதிலும் உத்தரவுகள் மீறப்பட்டன. ஆணைகள் தோல்வியுற்றன. வெளிப்படையாக விருந்தோம்பியவர்கள், சிறைவாசம் — அபராதம் என்ற அதன் பின்விளைவுகளை உணர்ந்தே இருந்தார்கள். இருப்பினும் சத்தியாக்கிரஹிகளை வரவேற்றார்கள். தண்டனையை அனுபவித்தார்கள். வேறு பலர் உதவுவதற்கு நூதன மார்க்கங்களைக் கையாண்டார்கள். சாப்பாட்டு மூட்டைகளை ஒருவர் மரக்கிளைகளிலிருந்து அவர்கள் பார்வையில் படுமாறு தொங்கவிட்டிருந்தார். கடைசியில் ஸி. ஆர்., ''சத்தியாகிரஹிகளுக்கு அளவுக்கு அதிகமான உபசாரம் செய்ய வேண்டாம்'' என்று கேட்டுக் கொள்ளும் படியாகி விட்டது!

அந்தப் பாத யாத்திரிகர்கள் சன்னியாசிகளும் அல்ல, சிப்பாய்களும் அல்ல. இருப்பினும் அந்த இரு சாராரையும் அவர்கள் பல விதங்களில் ஒத்திருந்தார்கள். காலையில் ஐந்து மைல்களும் மாலையில் ஐந்து மைல்களும் நடந்தார்கள். வயல்கள், வாழைத் தோட்டங்கள் தென்னந்தோப்புகள் ஆகியவற்றைக் கடந்து சென்றார்கள், கடலை நோக்கிப் பயணப்பட்ட காவேரி, அவர்களை அடிக்கடி சந்தித்து உடன் நடந்தாள். சத்தியாக்கிரஹிகள் தம்முடன் ஒரு வாழ்க்கை முறையைக் கொண்டு சென்று அதனைப் பிரபலப் படுத்தினார்கள்.

தங்கும் ஊர்களில் தீண்டாதார் குடிசைகளுக்குச் சென்று அவர்களுடன் உறவாடினார்கள். தீண்டாதார் அனுமதிக்கப்படவில்லை என்பதால் கோயில்களுக்குப் போவதைத் தவிர்த்தார்கள். கிராமங்களில் வீதிகளைப் பெருக்கிச் சுத்தப்படுத்தினார்கள். ஹிந்து — முஸ்லீம் ஒற்றுமை குறித்தும் மதுவிலக்கு பற்றியும் பேசினார்கள். ஒவ்வொரு நாளும் இரண்டு பொதுக் கூட்டங்களில் சாத்வீகப் புரட்சி பற்றிப் பிரசாரம் செய்தார்கள்.

வழி நெடுக நடக்கும் அசாதாரணமான, தீவிரமான பிரசாரம் பற்றி சென்னை அரசுக்கு அறிக்கை சமர்ப்பித்த தார்ன், ஸி. ஆர். சீக்கிரமாகக் கைது செய்யப்பட வேண்டும் என்று தாம் கூறிய யோசனை சரியானது என பணிவுடன் தெரிவித்துக் கொண்டார். மேலும் தொடர்ந்து, ''அரசின் கௌரவத்துக்கு இந்தப் பாத யாத்திரையினால் பங்கம் ஏற்பட்டிருக்கிறது'' என்று குறிப்பிட்டார்.

கால் கட்டை விரலில் ஏற்பட்ட ஒரு புண் காரணமாக ஸி. ஆர். இரண்டு, மூன்று நாட்களுக்குக் காலணி ஏதும் அணிய முடியவில்லை. வெற்றுக் காலோடு நடந்தாலும் பயணத்தின் சிரமங்களை நன்கு தாங்கிக் கொண்டார். இதன் மத்தியிலும் அவர் ஆசிரமத்தைச் சுற்றி நடக்கும் மதுவிலக்குப் பணி பற்றி விசாரித்து எழுத மறக்கவில்லை. ''அதைப் பற்றித்தான் எனக்குக் கவலையாக இருக்கிறது'' என்று அவர் கடிதம் எழுதினார். அவர் இடைவிடாமல் போராடியதன் காரணமாக ஆசிரமத்தின் சுற்று வட்டாரத்தில் கள்ளுக் கடைகள் சமீபத்தில் மூடப்பட்டிருந்தன. எனவே தள்ளாடியபடி நடக்கும் கிராமவாசிகளைச் சாலையில் காண முடியவில்லை.



வேதாரண்ய யாத்திரை - தலைவரும் தொண்டர்களும்

தார்னின் அதிகார கேந்திரமான தஞ்சாவூரில் இருவர் — சகோதரனும் சகோதரியும் — இவர்களுக்குத் தங்க இடமளித்து மேன்மையான மனத்துடன் விருந்தோம்பலும் செய்தார்கள். ஆனால் மாலைப் பொதுக் கூட்டத்துக்கு எந்த விதமான ஏற்பாடும் செய்யப்படவில்லை என்பதைக் கண்டதும் ஸி. ஆரின் மனம் ஏமாற்றத்தில் ஆழ்ந்தது. யாருமே பொறுப்பை ஏற்க முன்வரவில்லை என்று

அவருக்குத் தெரிய வந்தது. கடையில் ஒரு வழக்கறிஞர் ஒரு பழைய ஆடிப்போன மேஜையை அளித்தார். அந்த வழக்கறிஞரின் தோட்டக்காரன் துணையுடன் வி. ஆர். அதனைப் பொதுக் கூட்டம் நடக்கவிருந்த இடத்துக்குக் கொண்டு சேர்த்தார்.

அங்கே ஈ, காக்கையைக்காண முடியவில்லை. வி. ஆர். ஒரு மாபெரும் தோல்வியைச் சந்திக்கத் தம்மைத் தயார் படுத்திக் கொண்டார். 'தார்னின் தலைமையகம் அல்லவா இது? இந்த ஓரிடத்தில் நடக்கும் போரிலாவது நாம் அவருக்கு விட்டுக் கொடுக்க வேண்டியது தான்' என்று அவர் சமாதானம் செய்து கொண்டார்.

ஆனால் வி. ஆரும் அவர் குழுவினரும் குறித்த நேரத்தில் அங்கே அணிவகுத்துச் சென்றபோது அலை மோதும் ஜனசமுத்திரத்தையே கண்டனர். மனம் நெகிழ்ந்து போனார் வி. ஆர். அவர் பேச ஆரம்பிக்கு முன்னர் கூடியிருந்த இருபதாயிரம் பேரும் பூரண அமைதியுடன் பிரார்த்தனை செய்தனர்.

சட்டமன்ற முன்னாள் உறுப்பினர் பந்துலு அய்யர், "கும்பகோணத்தில் சத்தியாக்கிரஹிகள் அத்தனை பேரையும் இரு இரவுகள் தமது வீட்டில் தங்கி இருக்கச் செய்து விருந்தோம்பினார். அவருக்கு ஆறுமாதச் சிறைத் தண்டனை கிடைத்தது. அடுத்து செம்மங்குடியில் வரவேற்பு அளித்த கூட்டத்தினரில் சில அரசு ஊழியர்களும் இருக்கிறார்கள் என வி. ஆருக்குத் தெரிய வந்தது. "இது போன்ற துணிவு, சுதந்திரம் ஏற்கெனவே வந்து விட்டது என்பதைத்தான் உணர்த்துகிறது" என்று வி. ஆர். குழுமியிருந்தோரிடம் கூறினார். எதிர்பார்த்தது போலவே அந்த அரசு அதிகாரிகள் தங்கள் உத்தியோகங்களை இழந்தனர்.

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●



"வீட்டிலே ஐந்து குழந்தைகள் இருந்தும் வீட்டை இவ்வளவு சுத்தமாக வைத்துக் கொண்டிருக்கிறேயே, அது எப்படி?" என்று ஒரு பெண்மணியிடம் கேட்டாள் வீட்டுக்கு வந்த அவள் தோழி.

"அதுவா?... குழந்தைகளை வீட்டுக்குள்ளே விளையாட அனுமதிப்பதே இல்லே... 'வெளியே போய் விளையாடுங்கள்!' என்று விரட்டி விடுகிறேன்."

"கோடையில் வெளியிலே அனலாய்த் தகிக்கிறதே... இப்ப என்ன செய்வாயாம்?"

"கையிலே ஆளுக்கொரு குடையைக் கொடுத்தனுப்புகிறேன்!"

கதாகரன்.

திருத்துறைப் பூண்டியில் வி. ஆர். பொதுக் கூட்டத்தில் பேசிக் கொண்டிருந்த போது, ராமச்சந்திர நாயுடு சத்தியாகிரகிகளுக்கு உணவளித்ததற்காகக் கைது செய்யப்பட்டார். பெரும் திரளான மக்கள் அமைதி காத்தனர். காந்திய மார்க்கம் அவர்கள் மனத்தில் பதிந்து விட்டிருந்தது.

ஏப்ரல் 28ம் தேதி — யாத்திரையின் பதினாறும் நாள் — வேதாரண்யத்தை அடைந்த போது அங்கே ஒரு பெரும் கூட்டம் காத்திருந்தது. களைத்துப் போயிருந்த, ஆனால் புன்முறுவல் மாறாத வி. ஆர்., "வரவேற்பிதழை நீங்கள் படித்தளித்து விட்டதாக எண்ணிக் கொள்கிறேன். மாலைகளை நீங்கள் அணிவித்தாகி விட்டதாக நினைத்துக் கொள்கிறேன்" என்றார். முப்பதாம் தேதியன்று தாம் உப்புச் சட்டத்தை மீறப் போவதாகவும் அதைத் தொடர்ந்து மற்றவர்களும் மீறுவார்கள் என்று தாம் எதிர்பார்ப்பதாகவும் அறிவித்தார். "சத்தியாகிரஹிகளை இன்று கைது செய்யும் போலீஸார் வருங்காலத்தில் அவர்களுக்கு ஊழியம் புரிவார்கள்" என்று ஒரு சோதிடத்தையும் சேர்த்துச் சொன்னார்.

வேதாரண்யம்பின்னை உருவாக்கியிருந்த கூடாரங்களில் தங்கியிருந்த யாத்திரிகர்கள் மறுநாள் உபவாசமிருந்து பிரார்த்தனை செய்தார்கள். அதேபோல் மாநிலம் முழுவதிலும் தோழமை உணர்ச்சியுடன் ஏராளமானவர்கள் நடந்து கொண்டார்கள். வி. ஆர்., தாம் உப்புச் சட்டத்தை மீறப் போவதை அறிவித்துத் தார்னுக்குச் சம்பிரதாயமாக ஒரு கடிதம் எழுதினார்.

## 33. புனிதப் போராட்டத்தின் வெற்றி

தார்ன் போட்டிருந்த உத்தரவு பற்றியும் மக்கள் ஆண்மையுடன் நடந்து கொண்டது குறித்தும் வி. ஆர். மூலம் அறிந்த மகாத்மா பதில் எழுதியிருந்தார்: "நமது கால்களும் கைகளும் கட்டிப் போடப்பட்டிருப்பது நல்லதே. "திக்கற்றவர்களுக்குத் தெய்வமே துணை" என நாம் ஆனந்தமாகப் பாடலாம்." பழமொழியைத் தமிழிலேயே எழுதியிருந்தார் காந்தி. தென் ஆப்பிரிக்காவில் அவர் தமிழில் எழுதப் பழகி இருந்தார். இந்தப் பழமொழியையும் தெரிந்து கொண்டிருந்தார்.

இதற்குள் இந்தியா முழுவதும் ஒரு பரபரப்பு ஏற்பட்டிருந்தது. அரசு எதிர்நடவடிக்கை எடுத்திருந்தது. ஏப்ரல் 27ம் தேதி அறிவிக்கப்பட்ட பத்திரிகைகளுக்கான அவசரச் சட்டம், யங் இந்தியாவும் நவஜீவனும் மூடப்பட காரணமாயிற்று. பஜாஜ் இருபத்தைந்தரை மாதச் சிறைத் தண்டனை பெற்றிருந்தார். ஜவாஹர்லாலும் சிறையிலிருந்தார். சிந்து பகுதியைச் சேர்ந்த காரியக் கமிட்டி அங்கத்தினர் ஜெயராம்தாஸ் தௌலத் ராமை ஒரு போலீஸ் தோட்டா தாக்கியிருந்தது.

(தொடரும்)

தமிழாக்கம்: கி. ராஜேந்திரன்

குவாலிடி கோல்டன் திருடினது யார்?







ASP-KFP-7909




IS:1011

போலிகள் ஜாக்கிரதை!

# குவாலிடிஸ் கோல்டன்

## ஆரோக்கியமான குடும்ப பிஸ்கட்

## செலவு குறைந்தது



குவாலிடி
உணவுப் பண்டங்கள்
பெங்களூர்-560 039.

குவாலிடி உயர்தர பிஸ்கோத்துகளைத் தயாரிக்கிறது.



# திருமலை-திருப்பதி தேவஸ்தானம் திருப்பதி

## பக்தர்களுக்கு க்யூ வரிசை மண்டபங்களில் வசதிகள்

திருமலை திருப்பதி தேவஸ்தானம் திருமலை கோவிலில் தினசரி சேவை நேரங்களில் பல மாறுதல்களைக் கொணர்ந்து, க்யூ வரிசைகளில் சேவார்த்திகள் நெடு நேரம் காத்திருக்கும் அவதியைக் குறைத்துள்ளனர். அதோடு க்யூ வரிசைகளில் கீழ்க்கண்ட வசதிகளைத் தந்து, அவர்களது அவதியை நீக்கியும் உள்ளனர்.

1. ஆரோக்கியமான, காற்று வசதி படைத்த நீண்ட க்யூ வரிசை மண்டபங்கள் நிறுவி, அவற்றில், தலைக்கு மேல் மின் விசிறிகள் உண்டு.
2. காப்பி போர்டு இந்த மண்டபங்களில் உணவு வசதி தருகிறது.
3. நியாயமான விலைகளில் உணவுப் பொட்டலங்கள்.
4. ஆந்திரப் பிரதேச பால்வள நிறுவன அபிவிருத்திக் கழகம் வழங்கும் சுத்தமான பால்.
5. திருமலை திருப்பதி தேவஸ்தான வெளியீடுகள், சித்திரங்கள் விற்பனை
6. க்யூ வரிசைகளிலேயே மக்களுக்குக் கழிவு நீக்குமிடங்கள்.
7. டெலிவிஷன் கண்காட்சி வசதி.
8. தெய்வீக நிகழ்ச்சி நிரல்கள், சங்கீதம் ஒலி பரப்பும் வசதி.
9. ஒரு தரமுள்ள வைத்தியர் வைத்தியசாலையில் பரீட்சிக்கக் காத்திருப்பார்.
10. நீண்ட க்யூ வரிசையில் பெட்டிப் பொருள்களை அவதிப்படாமல் அவற்றை பாதுகாக்கும் பெட்டகங்களில் வைத்துக் கொள்ளும் வசதி, க்யூ மண்டபங்களின் முன்பு பாதரட்சைகளைப் பாதுகாக்கும் வசதி.
11. பேஷ்கார் தகுதி படைத்த அதிகாரி கோயிலின் முன்வாசலில் அமர்ந்து கோவில் பணியாளர்களது லஞ்ச லாவண்யங்களைத் தடுக்க முயற்சி செய்வார்.
12. கோயிலின் முன் முகப்பில் பேஷ்கார் தகுதி படைத்த அதிகாரி க்யூ மண்டபங்களில் சேவார்த்திகளுக்குத் தேவையானவற்றையும் வசதிகளையும் செய்துதரக் காத்திருப்பார்.

**P.V.R.K. பிரசாத் I.A.S.**
**எக்ஸிக்யூடிவ் ஆபீசர்**
**திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி**

SUBRA & R.M. TYD. 350

# இலக்கியத்தில் காமரசம்

(உயர்திரு நீதிபதி எம். எம். இஸ்மாயில் அவர்களுடன் பேட்டி):

கேள்வி: இலக்கியங்களில் காமரசத்தைப் புகுத்துவது பற்றித் தங்களது அபிப்பிராயம் என்ன?

இஸ்மாயில்: இப் பூவுலகில் மனித வாழ்க்கைக்கு அத்தியாவசியமான அம்சங்களில் முக்கியமான ஒன்று காமம். காமம் இல்லையேல் பிறப்பு அற்று சந்ததியற்று இவ்வுலகம் முடிவுக்கு வந்துவிடும். அறம் பொருள் இன்பம், வீடு எனப்படும் நான்கு உறுதிப் பொருள்களுள் ஒன்றாகக் காமத்துக்கு நம் முன்னோர்கள் இடம் அளித்து இருந்தார்கள். வம்சா விருத்திக்கு அடிப்படையான காமத்தை இலக்கியங்களில் இணைப்பதில் என்ன தவறு?

கேள்வி: இலக்கியங்களில் காமச்சுவையைத் தாங்கள் கூறும் நோக்கில் ஒப்புக்கொண்டாலும் விரசம் தட்டும் விதமாக அச்சுவையை விவரிக்கவேண்டிய அவசியம் என்ன?

இஸ்மாயில்: காமச்சுவை அனுபவத்தில் நுகரக் கூடியதேயன்றி வார்த்தைகளால் விளக்கக் கூடியது அல்ல. இதைத்தான் கம்பன் 'சொல் நலம் கடந்த காமச்சுவை' என்று தனது ராமாயணத்தில் கூறுகிறான்.

இத்தகைய சுவையை வார்த்தைகளால் விளக்க முயலும் போது எழுதுகிறவர், படிப்பவர் மனநிலைக்கு ஏற்ப விபரீதமான உணர்வுகள் உண்டாவதற்கு வாய்ப்பு ஏற்பட்டு விடுகிறது.

கேள்வி: காமச் சுவைக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து விரசம் தட்டும் விதமாகவே எழுதும் பல எழுத்தாளர்களிடம் இதனைச் சுட்டிக்காட்டினால் அதற்கு அவர்கள் "அம்பாளை வர்ணிக்கும் 'சௌந்தரிய லஹரி'யில் காமச் சுவை இல்லையா, கம்ப ராமாயணத்திலும் காளிதாசரின் படைப்புகளிலும் இல்லாததையா நாங்கள் எழுதிவிட்டோம்?" என்று பதில் அளிக்கிறார்களே இதைப் பற்றித் தாங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

இஸ்மாயில்: உயிர்ப் படைப்புக்கு அடிப்படைக் காரணமாக இருக்கும் ஒன்றைப் புனிதத் தன்மையோடு இணைத்து நம்முன்னோர்கள் கண்டதில் ஆச்சர்யம் இல்லாததோடு பொருத்தமும் இருக்கிறது.

ஒரு தலைவனுக்கும், தலைவிக்கும் இடையே நிகழும் உறவு, தலைவனது சிறப்புக்கள், இருவரும் முடிவில் இணைந்து மணம் புரிந்து கொள்ளல் ஆகியவற்றை வர்ணிப்பது பண்டைய இலக்கியங்களில் ஒரு முக்கியமான அம்சமாகக் கருதப்பட்டது.

இத்தகைய இலக்கியங்கள் எழுதப்பட்ட காலம், அக்காலத்தில் மக்களிடையே இருந்த வாழ்க்கை முறை, பழக்க வழக்கங்கள், மனப்பாங்கு, ஆகியவற்றை மனத்தில் கொண்டு அக்காலத்தில் எழுதப்பட்ட இலக்கியங்களில் வர்ணிக்கப் பட்டுள்ள காமச்சுவையினை உணர வேண்டும்.

மணம் செய்து கொள்ளப் போகும், அல்லது மணம் செய்து கொண்ட ஆண் பெண் ஆகியவர்களை நிலைக்களனாகக்



கொண்டு மட்டுமே காமச்சுவை பண்டைய இலக்கியங்களில் விவரிக்கப்பட்டது.

ஆனால் தற்போதைய சமுதாயச் சூழ்நிலையில் திருமணத்துக்கும் காமத்துக்கும் சம்பந்தமே இல்லாதது போல் தோன்றுகிறது. திருமணமாகாத ஆண் பெண் இடையே திருமணத்தைப் பற்றிய சிந்தனை சற்றேனும் இன்றி காம உறவு பரவிக் கிடக்கையில் (பெர்மிஸிவ்னஸ்) அதனை மேலும் தாண்டும் வகையில் இன்றைய எழுத்தாளர்கள் விரசம் தட்டும் விதமாகவே எழுதுவதை — எப்படி பண்டைய இலக்கியங்களுடன் ஒப்பிட முடியும்?

ஒரு காலத்தில் ஒரு சமுதாயத்தில் ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையின் அங்கமாக



"சார்! நம்ம புது டைப்பிஸ்ட் ரொம்ப சமர்த்து. ஸ்டென்சில கட் பண்ணு என்றால் அழகாக் கத்தரிக்கோலால் ரெண்டா கட் பண்ணிட்டா!"
கி. குப்புசாமி.

இருந்த ஒன்றை அதை விட்டுப் பெயர்த்தெடுத்து வேறொரு காலத்தில் முற்றும் மாறான சூழ்நிலையில் பயன்படுத்தி, 'முன்னால் பயன் படுத்தப்பட்ட வில்லையா? இப்போது பயன்படுத்தினால் என்ன தவறு' என்று கேட்பது தர்க்க ரீதியாகவோ அல்லது சமுதாய வளர்ச்சியின் அடிப்படையிலோ எப்படிப் பார்த்தாலும் பொருத்தமான வாதமாகாது!

கேள்வி: பண்டைய இலக்கியங்களிலும் கள்ளக் காதலும், திருமணமாகு முன்பே ஆணும் பெண்ணும் முறையற்ற உறவு கொண்டு பின்னரே மணம் செய்துகொள்ளும் களவுத் திருமணமும் இருந்துள்ளதே!

இஸ்மாயில்: விதி இருந்தால்தான் ஓர் ஆணும் பெண்ணும் சந்திப்பர் என்று பண்டைய இலக்கியங்கள் கூறுகின்றன. இம்மாதிரி விதிப்பயனால் ஒருங்கிணைந்து பின்னால் மணம் புரிந்து இணைந்து வாழப் போகிறவர்கள் திருமணமாகு முன்பே காமச்சுவையை அனுபவித்தலையும் பின்னர் மணம் புரிதலையும் களவுக் காதல் என்று பண்டைய இலக்கியங்கள் வர்ணிக்கின்றன. இங்கேயும் காமச்சுவையுடன் திருமணமும் இணைந்துதான் செல்கின்றது.

ஆனால் இன்று அத்தகைய நிலை உள்ளது என்று கூற முடியுமா?

கேள்வி: பண்டைய காலங்களில் கட்டப்பட்ட கோவில் மண்டபங்களில் காமத்தை விகாரமாக வெளிப்படுத்தும் விதமாகச் சிற்பங்கள் காணப்படுகின்றனவே!

இஸ்மாயில்: காமச்சுவையைப் புனிதமானதாகக் கருதின காரணத்தால்தான் அக்காலத்தினர் கோவிலில் இதனைச் சிற்பமாக வடித்து வைத்துள்ளனர் என்பது தெளிவாகிறதே! அதோடு கோவில்களைக் கலையைப் பரப்பும் சாதனமாகவும் அக்காலத்தினர் கருதினர். நடனக்கலை, சிற்பக் கலை, சித்திரக்கலை ஆகியவற்றைத் தழைத்தோங்கச் செய்யக் கோவில்களை நிலைக்களன்களாகக் கொண்டனர். சிற்பக் கலையில் பலவித சுவைகளை வடிக்கும்போது காமச்சுவையும் அதில் அடங்கத்தானே செய்கிறது.

இன்னொன்று!... இறைவனை வணங்கத்தான் கோவிலுக்குப் போகிறோம். இறையுணர்வுடன் கோயிலுக்கு வரும்போது இச்சிற்பங்களை நாம் கண்டால் அவற்றிலுள்ள கலையழகுதான் நமக்குப் புலப்படுமே தவிர, விரசம் தோன்றாது. மாறாக ஏற்கெனவே பாழ்பட்டுக் கொண்டிருக்கும் சமுதாயத்தின் வீழ்ச்சியை மேலும் விரைவு படுத்தும் விதத்தில் காம ரசத்தைச் சாதனமாகக் கொண்டு வியாபாரம் செய்பவர் கண்ணுக்கு இவை நிச்சயம் விரசமாகத்தான் தோன்றும்!

கேள்வி: வாத்ஸ்யாயனர் மட்டும் காம சாஸ்திரம் எழுதினதை அங்கீகரிப்பவர்கள், அதனை நாவலில் புகுத்தினாலோ அல்லது சினிமாப் படமெடுத்தாலோ ஏன் குறை கூறவேண்டும்? என்று ஆதங்கப்படுகிறார்களே அவர்களுக்குத் தாங்கள் அளிக்கும் பதில் என்ன?

இஸ்மாயில்: கலைகளில் ஒன்றாகக் காமக் கலையும் அன்று கருதப்பட்டது. ஆகையால் மற்ற கலைகளை விளக்கியதைப் போல் காமத்தையும் கலையாகவே அந்தக் காலத்தில் நூல் வடிவிலும், சிற்ப வடிவிலும் வடித்தார்கள். அப்படி வடித்தவர்கள் ஒரு புனிதக் கலையைத் தாங்கள் வளர்ப்பதாகவே எண்ணினார்கள். வருங்காலத்தில் அக்கலை மடிந்து போகாமல் என்றும் நிலைத்து இருக்க வேண்டும் என்பதே அவர்களது நோக்கம். கீழ்த்தரமான உணர்ச்சிகளைக் கிளப்பிச் சமுதாயத்தைச் சீர்கெடச் செய்வதை அவர்கள் கனவிலும் கருதவில்லை.

அதற்கு மாறாக, இன்றோ பக்குவப்படாத உள்ளங்களில் கீழ்த்தரமான உணர்ச்சிகளைக் கிளப்பி விட்டு மக்களின் பலவீனத்தைப் பயன்படுத்திக் கொண்டு பணம் பண்ணுவது அல்லவா நோக்கமாக இருக்கிறது!

பேட்டி: நாயகன்

புகைப்படம்: மன்னை மூர்த்தி

பட விமர்சனம்

# நாடகமே உலகம்

இது ஒரு சவால் படம்!

ஆமாம், கதைப்படி ராணி (கே. ஆர். விஜயா) தன் தந்தையிடம் அவருக்குப் பிள்ளையில்லாக் குறையைத் தன் திறமையினால் இட்டு நிரப்புவதாகச் சவால் விட்டு வீட்டை விட்டுக் (ஓடிப்போக அல்ல) கிளம்புகிறார்.

புன்னகை அரசியையே மூலதனமாகக் கொண்டு — கதையும் வேண்டாம் கத்திரிக்காயும் வேண்டாம் — ஒரு வெற்றிப் படத்தை(?) வெளியிட்டுக் காட்டுகிறேன், பார் என்று சவால் (கனவு) விட்டிருக்கிறார்கள் அசோகா பிக்சர்ஸார்.

எங்கள் பெயரைப் பார்த்தாலே திருப்தியோடு தியேட்டருக்கு வருவார்கள் ரசிகர்கள் என்று தயாரிப்பாளரிடம் சவால் விட்டிருக்க வேண்டும் இயக்குனர்கள் கிருஷ்ணன்—பஞ்சு.

அங்கங்களை தெளித்து ஆட மட்டும்தான் தெரியும் எனக்கு என்று முடிவு கட்ட வேண்டாம். என்று சவால் விடுவது போல் நல்ல நடிப்புக்கும் நாட்டியத்துக்கும் வழி வகுத்துக் கொண்டிருக்கிறார் ஜெயமாலினி.

பாடல் எழுத அப்படி ஒன்றும் தலையைப் பிய்த்துக் கொள்ள வேண்டாம். வசனங்களை வரிசையாக எழுதிக் கொடுத்து விட்டால் மெட்டமைத்துப் பாடிக் கொள்ளுகிறார்களா இல்லையா பாருங்கள் என்று வாலி சவால் விட்டிருக்கிறார்.

''என் ஹாஸ்யத்தில் அரசியல் கலப்பே கிடையாது. நம்புங்கள். இது நிஜமாக்கும்'' என்று சவால் விட்டுத் தம் மாமூல்படி வெடி வைக்கிறார் 'சோ'.

பஞ்ச தந்திரக் கதைகள், விக்கிரமாதித்தன் கதைகளைப் போல இப்போதும் எங்களால் கதைக்குள் கதை பண்ணத் தெரியுமாக்கும் என்று திரைக் கதை வசன கர்த்தா ஆரூர் தாஸ் சவால் விட்டிருக்கிறார். இத்தனை சவால்களையும் ஏற்றுத் தியேட்டருக்குப் போகும் ரசிகர்கள் திணறித் தவிக்கிறார்கள்.

பம்பாய் ஆபீஸ் நிர்வாகத்தைச் சீர் செய்யப் போகும் ராணி, உலகத்தின் உண்மைச் சொரூபத்தையும் பல அவலங்களையும் சந்திக்கிறார். இதுவே கதை இல்லை. நாடகம். புன்னகை அரசிக்கு ஒன்று சொல்ல விரும்புகிறோம். எந்தச் சிக்கலான பாத்திரத்தையும் காரெக்டர்களையும் அநாயாசமாக நடித்துக் காட்டும் திறமை மிக்கவர் என்பதைத் தமிழகம் நன்கு அறியும். நடிப்புத் துறையில் ஓர் உயர்ந்த இடத்துக்கு ஏறிவிட்ட அவர் இனி தாம் நடிக்கும் படங்களில் அதன் தகுதியையும் தன்மையையும் உணர்ந்து ஏற்கவேண்டும். தயாரிப்பாளர் தம்மை வைத்து 'எக்ஸ்பிளாய்ட்' பண்ணுவதற்கு இடம் கொடுக்கக் கூடாது. உடல் இளைத்து விம்பிளாகத் தோற்றம் அளித்தாலும் 'டீன் ஏஜ்' கேர்ள் பாத்திரத்துக்கு தாம் ஏற்றவரில்லை என்பதையும் உணர்ந்து கொள்ள வேண்டும். விஜயாவின் நடிப்பாற்றலில் நம்பிக்கை கொண்டுள்ள ரசிகர்கள் அவர் எத்தனை வருஷமாகக் காதலி பாத்திரம் ஏற்று நடித்து வருகிறார் என்பதையும் மறப்பதில்லையே!

இளைய தலைமுறை நடிகர்கள் நாடகமே உலகத்தில் பவனி வருகிறார்கள். வர்ணம் பல இடங்களில் ரொம்பப் பழமையாக இருக்கிறது. இந்த உலகம் கிருஷ்ணன் பஞ்சுவுக்குப் பெயர் வாங்கிக் கொடுக்காது போலிருக்கே?

—கௌசிகன்



.ராம்.


















Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras-600032. Editor: K. Rajendran

# படுக்கையிலிருந்து கொண்டே நீங்கள் புகைக்கிறீர்களா?

# அவ்வாறு செய்யாதீர்கள்

உங்கள் படுக்கையில் சிகரெட் நெருப்பு விழுந்து விட்டால் நொடிப்பொழுதில் படுக்கையறை முழுவதும் தீக்குயிறையாகிவிடும்.

அதன் மூலம் உங்களுக்கும் குடும்பத்தினர்க்கும் அபாயத்தைத் தேடாதீர்கள்.

**புகைப்போர் உள்ளவிடத்து, பதுங்கியிருக்குது தீ விபத்து**

1. உறக்கம் வரும்போது நீங்கள் படுக்கை அல்லது [illegible] இடத்திலிருந்தும் புகைக்கக் கூடாது.
2. சிகரெட்டை கடைசி வரை புகைக்காதீர்கள். அது உங்கள் விரலை சுடும். கீழேயும் விழுந்து விடும்.
3. நெருப்புடன் உள்ள சிகரெட்டை வைத்துவிட்டு அக்கம் பக்கம் கூட போகக் கூடாது.
4. உலோகம், மண் அல்லது கிளாஸ் போன்றவற்றாலான ஆஷ் ட்ரேயில் உள்ள தண்ணீரில் சிகரெட்டை அழுத்தி அணைத்திடுங்கள்.
5. குப்பை, கிழிந்த காகிதங்கள் போடும் கூடைகளில் சிகரெட்டை போடக்கூடாது.
6. சினிமா கொட்டகை, லிஃப்ட், புகைவண்டி, பேருந்து, பெட்ரோல் பம்பு ஆகிய இடங்களிலும் புகைப்பதற்கு தடை செய்யப்பட்டுள்ள மற்ற இடங்களிலும் சிகரெட் குடிக்காதீர்கள்.

லாஸ் ப்ரிவென்ஷன் அசோஸியேஷன்—நாங்கள் ஒத்த மனமுடையவர்களுடன் ஒத்துழைக்க விரும்புகிறோம். அப்படிப் பட்டவர்களின் ஈடுபாட்டை வரவேற்கிறோம். தயவு செய்து விவரங்களுக்கு எழுதவும்.




இழப்பைத் தவிர்த்திடுவோம். வளத்தைப் பெருக்கிடுவோம்.

லாஸ் ப்ரிவென்ஷன் அசோஸியேஷன் ஆஃப் இந்தியா லிட்.

வார்டன் ஹவுஸ், சர் பி.எம். ரோடு, பம்பாய் 400 001.

CASLPA-7-172 TAM

